T.C.A. Venkatesan

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்த மஹாகுரவே நம:

## ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனருளிச் செய்த
## தீபப்ரகாச ஸ்தோத்ரம்

# சரணாகதி தீபிகா.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரியற்றிய
சரணாகதி ஸாரதீபிகா என்னும் வியாக்கியானத்தோடு கூடியது.

### அவதாரிகை.

விளக்கொளி யெம்பெருமானென்று தென்மொழியிலும் தீபப்ரகாசனென்று வடமொழியிலும் வழங்கு மெம்பெருமா னெழுந்தருளியிருக்கும் திவ்யதேசம் திருத்தண்கா வென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும். "என்னை யாளுடை யீசனை யெம்பிரான் தன்னை யாம் சென்று காண்டும் தண்காவிலே" என்று பெரிய திருமொழியிலும், "விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்" என்று திருநெடுந்தாண்டகத்திலும் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்யதேசமிது. இத்தலத்தின் பரிஸரத்திலேயே ஆசிரியர் தாமும் அவதரித்தருளினர். இத்தலத் தெம்பெருமானைத் துதிக்கத் திருவுள்ளம் பற்றின வாசிரியர் இந்த ஸ்துதிக்கு சரணாகதி தீபிகையென்று திருநாமமிட்டருளினர். சரணாகதி ரஹஸ்யார்த்த தத்துவங்களை இதில் வெளியிட்டருளத் திருவுள்ளம் பற்றியே இந்தத் திருநாமமிட்டருளினர். சரணாகதிக்கு இன்னார் அதிகாரியென்பது, சரணாகதியின் ஸ்வரூபம் இத்தகைத் தென்பது, சரணாகதர்களின் மேன்மையிருக்கும்படி முதலான பல விஷயங்கள் எளிய முறையில் வெளியிடப்பட்டிருப்பது இதுதன்னிலேயாம். ந்யாஸ தசகம், ந்யாஸ திலகம், ந்யாஸ விம்சதி என்னும் க்ரந்தங்களோ டொக்கப் பரிகணநீயமானது இது.

சாஸ்த்ரார்த்தங்களை ஸ்தோத்ரத்திலே யேறிட்டு அருளிச்செய்யும் வழியை முதன் முதலாக ஆளவந்தார் காட்டியருளினார். ஸ்தோத்ரரத்நத்திற்கு அவதரித்திருக்கிற தனியனைக் கொண்டு அதனை யுணரலாம்; ‘ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம். ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ர:" என்றிறே அந்தத் தனியனிருப்பது. அவ்வண்ணமாகவே இந்த ஸ்துதிக்கும் ஒரு தனியன் அவதரித்திருக்க வேண்டும். அக்குறைதீர இந்த ஸ்துதியின் முதல் ச்லோகமே நன்கு அமைந்ததாயிற்று. ... ....

### ❊ शरणागतिदीपिका ❊

पद्मापतेः स्तुतिपदेन विपच्यमानं पश्यन्त्विह प्रपदनप्रवणा महान्तः ।
मद्वाक्यसंवलितमप्यजहत्स्वभावं मान्यं यतीश्वरमहानससंप्रदायम् ॥ १

பத்மாபதே: ஸ்துதிபதேந விபச்யமாநம் பச்யந்த்விஹ ப்ரபதநப்ரவணா மஹாந்த:,
மத்வாக்ய ஸம்வலிதமப்யஜஹத்ஸ்வபாவம் மாந்யம் யதீச்வரமஹாநஸ ஸம்ப்ரதாயம். (1)

பத்மாபதே: ஸ்துதி பதேந விபச்ய மாநம் மத்வாக்ய ஸம்வலிதமபி அநுஹத் ஸ்வபாவம் மாஸ்யம் யதீச்வர மஹாநஸ ஸம்ப்ரதாயம் இஹ ப்ரபத நப்ரவணா: மஹாந்த: பச்யந்து. } ச்ரியபதியின் ஸ்தோத்ர ரூபேண பரிணமிப்பதாய், என் வாக்கோடு சேர்ந்திருந்தும் தன்மை குன்றாததாயும் இருக்கிற எதிவராஜர் மடைப்பள்ளி ஸம்ப்ரதாயத்தை இங்கு ப்ரபத்தி விஷயமான மஹான்கள் அநுபவிக்கட்டும்.

"எதிவரனார் மடைப்பள்ளிவந்த மணமெங்கள் வார்த்தையுள் மன்னியதே" என்றும் "இதி யதிராஜமஹாநஸ பரிமள பரிவாஹ வாஸிதாம் பிபத" என்று மருளிச் செய்பவர் ஆசிரியர். எம்பெருமானார் பக்கலிலே பழுக்கக் கேட்ட கிடாம்பியாச்சான் மூலமாகக் கிடாம்பி யப்புள்ளாரளவும் வந்து தேங்கின ஸத்ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் இந்த சரணாகதி தீபிகையென்னும் ஸ்துதி நூல் வழியாக வெளிவருகின்றமை பாரீர் என்று விவக்ஷித்து "யதீச்வர மஹாநஸ ஸம்ப்ரதாயம் இஹ பச்யந்து" என்றருளிச் செய்தாராயிற்று. யதீச்வர மஹாநஸ ஸம்ப்ரதாயார்த்தம் அநேக விஷயங்களாக இருந்தாலும் ப்ரக்ருதம் வெளிவருவது சரணாகதி விஷயகமென்று தெரிவிக்கவேண்டி "ப்ரபதந ப்ரவணா மஹாந்த: பச்யந்து" என்றார். 'எம்பெருமானுக்கு இதுவொரு ஸ்தோத்ர நூல்' என்று ஸாமாந்யமாக நினைக்கலாம்படி யிருந்தாலும், இது மற்ற ஸ்தோத்ரங்களைப் போன்றதன்றென்றும் சரணாகதி விசேஷார்த்தமே ஸ்துதியாக வடிவெடுத்ததென்றும் முதல் பாதத்தினால் வ்யஞ்ஜிதமாயிற்று. மூன்றாவது பாதத்தில் ஸ்வரூப ப்ராப்தமான கைங்கர்யாநுஸந்தான முறைந்திருக்கும். சிறந்த அர்த்த விசேஷமானது நீசனேன் நிறையொன்றுமிலேனுடைய என்னுடைய வாக்கோடே கலசியிருந்தாலும் கெடுதலொன்று படைத்ததில்லை யென்கை. ப்ராமாணிகத்வமும் ப்ரபந்நஜந பரிக்ராஹ்யத்வமுமாகிற ஸ்வபாவம் குன்றாமையை அநுஹத் ஸ்வபாவம் என்பதனா லருளிச் செய்தபடி. .... .... (1)

नित्यं श्रिया वसुधया च निषेव्यमाणं निर्व्याजनिर्भरदयाभरितं विभाति ।
वेदान्तवेद्यमिह वेगवतीसमीपे दीपप्रकाश इति दैवतमद्वितीयम् ॥ २

நித்யம் ச்ரியா வஸுதயா ச நிஷேவ்யமாணம் நிர்வ்யாஜநிர்ப்பர தயாபரிதம் விபாதி,
வேதாந்த வேத்யமிஹ வேகவதீஸமீபே தீபப்ரகாச இதி தைவத மத்விதீயம்.

ச்ரியா வஸுதயா ச நித்யம் நிஷேவ்ய மாணம் நிர்வ்யாஜ நிர்ப்பர தயாபரிதம் வேதாந்த வேத்யம் தீபப்ரகாச இதி அத்விதீயம் தைவதம் இஹ வேகவதீ ஸமீபே விபாதி. } திருமகளும் மண்மகளும் எப்போதும் கூடியிருக்கப் பெற்றதும் நிருபாதிக நிரவதிக தயா பரிபூர்ணமும் மறை முடிகளால் அறியத் தக்கதும் விளக்கொளி யென்று நிரூபிக்கக் கொண்டு இணையற்றது மானவொரு தெய்வம் இங்கு வேகவதி ஸமீபத்தில் விளங்கா நின்றது.

வஸ்து நிர்தேசரூபமான மங்களா சரணமிது.

* திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழும்படியை முதற் பாதத்தாலே யருளிச் செய்தார். அவதாரம் போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே ஸம்ஸாரம் கிழங்கெடுத்தா லல்லது பேரேனென்றிருப்பதற்கு அடி அளவு கடந்த கருணையே யாதலால் அக்கருணையுடைமை சொல்லுகிறது இரண்டாமடி. எல்லார்க்கும் கட்கண்ணால் காணலாயிருக்கச் செய்தேயும் வேதாந்த வேத்யம் என்றது—ஊனக் கண்ணுக்கு நிலமல்லாத அம்சங்களெல்லாம் * சாஸ்த்ர யோநித்வாதி கரணத்தின்படியே வேதாந்தங்களைக் கொண்டு அறியலாயிருக்கு மென்கைக்காக. வேதாந்த ப்ரஸ்தாவம் செய்தவாறே வேதாந்தத்தில் ஒரு சிறந்த பதம் நினைப்பூட்டப் படுகிறது அத்விதீயம் என்று. * ஏகச் சோளக்ருபஸ் ஸம்ராட் அத்விதீயோஸ்தி பூதலே *

என்றால் அவனைப்போன்ற வேறோராசன் இல்லையென்ற தாகுமத்தனை போக்கி அவனுக்குப் புத்ர களத்ர பரிஜநாதிகள் கிடையாவென்று சொன்னதாக எப்படி யாகாதோ, அப்படியே இங்கும் 'அத்விதீயம் தைவதம்' என்றதற்கு—தன்னோடொக்கப் பரிகணிக்கலாம்படியான வேறொரு தெய்வத்தை யுடைத்தாகாத தென்பதே பொருளாகுமென்றுணர்க. (வேகவதீ ஸமீபே விபாதி.) விரஜா நதிக்கரையை விட்டுவந்த பெருமானுக்கு வேகவதீ நதிக்கரையில் விருப்பு மிகவும் ருசித்தபடி. ... .... .... (2)

दीपस्त्वमेव जगतां दयिता रुचिस्ते दीर्घं तमः प्रतिनिवर्त्यमिदं युवाभ्याम् ।
स्तव्यं स्तवप्रियमतः शरणोक्तिवश्यं स्तोतुं भवन्तमपि [वाच्छति] लष्यति जन्तुरेषः ॥ २

தீபஸ் த்வமேவ ஜகதாம் தயிதா ருசிஸ் தே தீர்க்கம் தம: ப்ரதிநிவர்த்யமிதம் யுவாப்யாம்.
ஸ்தவ்யம் ஸ்தவப்ரியதமம் சரணோக்தி வச்யம் ஸ்தோதும் பவந்தமிஹ வாஞ்சதி ஜந்துரேஷ:.

(ஹே பகவந்!) ஜகதாம் தீப: த்வமேவ; ருசி: தே தயிதா; இதம் தீர்க்கம் தம: யுவாப்யாம் ப்ரதிநிவர்த்யம்; சரணோக்தி வச்யம் ஸ்தவ்யம் ஸ்தவ ப்ரியதமம் பவந்தம் ஏஷ: ஜந்து: இஹ ஸ்தோதும் வாஞ்சதி.

வாரீர் விளக்கொளி யெம்பெருமானே! உலகுக்கெல்லாம் விளக்கு தேவரீரே; விளக்கின் ஒளியோ வென்றால் தேவரீருடைய தேவியார்; இவ்விருள் தருமா ஞாலமாகிற நெடிய இருள் நீங்களிருவரும் சேர்ந்து போக்கத் தக்கது; சரணமென்கிற வாக்குக்கு வசப்படுபவரும் ஸ்தோத்ரார்ஹரும் ஸ்துதி ப்ரியருமான தேவரீரை அடியேன் இங்குத் துதிக்க விரும்புகிறேன்.

*** விளக்கொளியென்றும் தீபப்ரகாசனென்றுமுள்ள திருநாமம் எம்பெருமானொருவனுக்கே வழங்கப்பட்டு வந்தாலும் இது திவ்ய தம்பதிகளுக்கே ஏற்ற திருநாமமாகுமென்பதை மூதலியா நின்று கொண்டு ஸ்துதியிலே தமக்குள்ள விருப்பத்தை விண்ணப்பஞ் செய்கிறாரிதில். "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்று பிராட்டியும், "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" என்று பெருமாளும் தனித்தனியே பணித்தருளினபடியே எம்பெருமான் மணித்யுமணிதீபாதிரூப ப்ரபாவத் பதார்த்தமாயும், பிராட்டி தத்குணபூதமான ப்ரபாபதார்த்தமாயுமிருக்கை சாஸ்த்ரஸித்தம். "ஜயத்யாச்ரித ஸந்த்ராஸ த்வாந்த வித்வம்ஸநோதய:, ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரமவ்யோமபாஸ்கர:" என்று ஆசிரியர் தாமும் (ரகுவீர கத்யோபக்ரமே) இதுதன்னை யருளிச் செய்தார். பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே "ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதபி மஹார்க்கம் ந விகுணம் ந குண்ட ஸ்வாதந்த்ர்யம் பவதி ச ந சாந்யாஹித குணம்" என்று அந்யபரோக்தியினாலே இது தன்னை நிபந்தித்தார். ஆக விளக்கும் ஒளியும் சேர்ந்தே தமோநிரஸநக்ஷமமாகக் காண்கையாலே திவ்ய தம்பதிகளான நீங்களிருவரும் சேர்ந்து இவ்விருள்தருமா ஞாலத்தின் தன்மையைத் தொலைத்தருளலாகுமென்றார் பூர்வார்த்தத்தாலே. இத்தால் ஆசிரியர் தம்முடைய தமோநிராஸத்தையும் ஸித்தவத்கரித்துக் கொண்டு அபஹததமஸ்கரான தாம் ஸ்துதிக்ருதிக்கு அர்ஹரென்னுமிடத்தை உத்தரார்த்தத்தாலே பேசுகிறார்.

ஸஹஸ்ரநாமத்திலே "ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:" என்றதை "ஸ்தவ்யம் ஸ்தவப்ரியம்" என்று அநுபாஷிக்கிறார். ஸ்தவ்யத்வமாவது ஸ்துதி யோக்யத்வம். "கொள்ளக் குறைவிலன்" (திருவாய்மொழி 3—9—5.) என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரத்திலே "நீங்கள் யாவை யாவை சில ஏற்றங்களை யிட்டுக் கவி பாடினீகோள், அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தில்

ஒரு குறையுடையனல்லன்" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். இதன் கருத்து யாதெனில்; தலையில் மயிரில்லாதா னொருத்தனைக் குழலழகனென்று பாடினால் அவன் வெள்க வேண்டியிருக்கும்; அறிவொன்று மில்லாதா னொருவனைக் கல்விக் கடலென்று பாடினால் அவன் அந்த ஸ்துதியைக் கொள்வதற்கு லஜ்ஜிக்க வேண்டியிருக்கும். எம்பெருமான் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாகையாலே யார் எங்ஙனே துதித்தாலும் எவ்விதமான ஸ்துதியையும் கொள்ளக் குறையில்லாதானாயிருப்பன்; இதுவாயிற்று ஸ்தவ்யத்வம். இனி ஸ்தவப்ரியத்வமாவது—மக்களின் மழலைச் சொற்களைக் கேட்க ஆசைகொண்டிருக்கும் மாதாபிதாக்களைப்போலே நம்போல்வாருடைய அவத்யஜடிலமான துதிமொழிகளையும் கேட்கையிலே ருசியுடையனா யிருக்கையாம். ஸ்தவே ப்ரிய:- ஸ்தவப்ரிய:; ஸ்தவ: ப்ரிய: யஸ்ய ஸ:- ஸ்தவ ப்ரிய:, என்று தத்புருஷ பஹுவ்ரீஹிக ளிரண்டு யோக்யம்.

[சரணோக்திவச்யம்.] சரணாகதிதான் மாநஸிகம் வாசிகம் காயிகம் என்று மூன்று படிப்பட்டிருக்குமே. "ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்று சாஸ்த்ரார்த்தமிருக்கச் செய்தேயும் மநஸ் ஸஹகாரமின்றிக்கே சரணமென்ற உக்தி மாத்ரமுண்டானாலும் அவ்வளவுக்கே ஸர்வாத்மநா வசம்வதனா யிருப்பனென்கை. "என்னுரைச் சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் இடரைத் தீர்த்தாய், அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றாப்போலே மடிமாங்காயிட்டு விஷயீகரிக்கு மெம்பெருமான் சரணோக்தியைப் பெற்றானாகில் ஸர்வஸ்வமும் பெற்றானாய்க் களிப்பனாயிற்று. * மாதவனென்றதே கொண்டு * என்றும் * திருமாலிருஞ் சோலை மலையென்றேன் என்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான் * என்றுமுள்ள பாசுரங்களை இங்கே யோஜிப்பது. 'அஹம் வாஞ்சாமி' என்ன வேண்டுமிடத்து ஏஷ ஜந்துர் வாஞ்சதி' 'ஏஷ ஜநோ வாஞ்சதி' என்றாப்போலே ப்ரதம புருஷனையிட்டுச் சொல்லுகை கவி ஸம்ப்ரதாயம்.

... .... ... (3)

पद्माकरादुपगता परिषस्वजे त्वां वेगासरिद्विहरणा कलशाब्धिकन्या ।
आहुस्तदाप्रभृति दीपसमावभासमाजानतो मरकतप्रतिमं वपुस्ते ॥ ४

பத்மாகராதுபகதா பரிஷஸ்வஜே த்வாம் வேகாஸரித்விஹரணா கலசாப்தி கந்யா,
ஆஹுஸ் ததாப்ரப்ருதி தீபஸமாவபாஸம் ஆஜாநதோ மரகதப்ரதிமம் வபுஸ்தே. (4)

(ஹே பகவந்!) பத்மாகராத் உபகதா வேகாஸரித் விஹரணா கலசாப்தி கந்யா (யதா) த்வாம் பரிஷஸ்வஜே, ததா ப்ரப்ருதி ஆஜாநத: மரகத ப்ரதிமம் தே வபு: தீபஸமாவபாஸம் ஆஹு:

[illegible] விளக்கொளி யெம்பெருமானே! தாமரைத் தடாகத்தினின்றும் வந்து வேகவதியில் விஹாரம் செய்பவளான பிராட்டி எப்போது தேவரீரைத் தழுவிக் கொண்டாளோ, அப்போது முதலாக, இயற்கையில் [illegible]கம் போன்றதான தேவரீருடைய திருமேனியைத் தீபத்[illegible]டொத்த தேசுடையதாகப் பெரியார்) சொல்லுகின்றார்கள்.

* * * திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கையாழ்வார் "திருத்தண்காவில்—விளக்கொளியை மரதகத்தை" என்றருளிச் செய்திருப்பதில் ஒரு சங்கை தோன்றக்கூடியதுண்டு; மரகதத்தினொளியும் விளக்கினொளியும் வெவ்வேறுபட்ட நிறமேயன்றி ஒரே நிறமன்று. மரகதத்தினொளி பசுமையானது. விளக்கினொளி ஹிரண்மயமானது. இவ்விரு நிறமும் ஏகாச்ரயத்தில் கூடுவது எங்ஙனே? என்று சங்கை தோன்றும். அதற்குப் பரிஹாரமுணர்த்துகிறது இந்த ச்லோகம். பசுமை, நீலம், கருமை என்னுமிவை பர்யாயமாகவே

கவிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆகவே மரகத நிறமும் நீல நிறமும் பர்யாயமேயாயிற்று. இனி, இதனில் வேறுபட்ட விளக்கொளி [தீபத்தின் நிறம்] எம்பெருமானுக்கு எங்ஙனே கூடுவதென்கிற சங்கைக்குப் பரிஹாரம் வேண்டும். அது சொல்லுகிறது இந்த ச்லோகத்தினால். பத்மத்தின் நிறமும் தீபத்தின் நிறமும் வேற்றுமைப் பட்டதன்றிக்கே ஒன்றேயாதலால், * கமலமலர்மேல் செய்யாளான பிராட்டி தேவரீருடைய திருமேனியிலே எப்போது தோய்ந்தாளோ, அப்போது முதலாக தேவரீருக்கு விளக்கொளி வாய்த்ததென்று ரஸிகர்கள் கூறுகின்றார்களென்றதாயிற்று. இங்குப் பிராட்டியை கலசாப்திகந்யா என்று விசேஷித்தது ஸாபிப்ராயம்; திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அதில் நின்றும் தோன்றிய பிராட்டி எப்படி ஓடிவந்து தேவரீரைத் தழுவிக்கொண்டாளோ, அப்படியே வேகவதிக் கரையிலும் வந்து தழுவிக்கொண்டாளென்கை. (4)

स्वामिन् ! गभीरसुभगं श्रमहारि पुंसां माधुर्यरम्यमनघं मणिभङ्गदृश्यम् ।
वेगान्तरे वितनुते प्रतिविम्बशोभां लक्ष्मीसरः सरसिजाश्रयमङ्गकं ते ॥ ५

ஸ்வாமிந்! கபீரஸுபகம் ச்ரமஹாரி பும்ஸாம் மாதுர்யரம்யமநகம் மணிபங்கத்ருச்யம்
வேகாந்தரே விதநுதே ப்ரதிபிம்பசோபாம் லக்ஷ்மீஸர: ஸரஸிஜாச்ரய மங்ககம் தே. (5)

ஹே ஸ்வாமிந்! கபீரஸுபகம் பும்ஸாம் ச்ரமஹாரி மாதுர்யரம்யம் அநகம் மணிபங்கத்ருச்யம் ஸரஸிஜாச்ரயம் லக்ஷ்மீஸர: தே அங்ககம் ச வேகா அந்தரே ப்ரதிபிம்ப சோபாம் விதநுதே.

தீபப்ரகாச பகவானே! மிக்க ஆழமுடையதும் ஸ்வச்சமானதும் ஜனங்களின் ச்ரமத்தைப் போக்குவதும் இனிப்புள்ளதும் அழுக்கற்றதும் ரத்னசகலம்போல் தோனுவதும் தாமரைகளுக்கு இருப்பிடமுமான பிராட்டியாகிற தடாகமும் மேற்சொன்ன விசேஷங்கள் பொருந்திய தேவரீருடைய திவ்யாவயவமும் வேகவதியிடையில் பிரதிபிம்ப சோபையைக் காட்டுகின்றன.

* * * மிக விலக்ஷணமான சிலேடையில் இந்த ச்லோகமமைந்தது. வேகவதியாற்றினுள்ளே பிராட்டியின் திருமேனியும் எம்பெருமான் திருமேனியும் பிரதிபலிக்கின்றது. இதை யுற்றுநோக்குமிடத்து, பிராட்டியின் திருமேனிதான் எம்பெருமான் திருமேனியாகத் தோன்றுகின்றதோ; அல்லது எம்பெருமான் திருமேனிதான் பிராட்டியின் திருமேனியாகத் தோன்றுகின்றதோ! என்று விதர்க்கிக்கலாம்படியுள்ளது. ஸ்த்ரீயான பிராட்டியின் உருவமும் புமானான எம்பெருமானுடைய உருவமும் இந்த விதர்க்கத்தை எங்ஙனே ஸஹிக்குமென்று சங்கை தோன்றக்கூடும். விசேஷண ஸாம்யத்தையிட்டு அந்த வாசி தோன்றாதபடி செய்திருப்பது விலக்ஷண கவிதாசாதுர்யம். பிராட்டி ஒரு தடாகமாக ரூபணம் செய்யப்பட்டாள்; அந்த தடாகமும், * தாமரை நீள்வாசத்தடம் போல் வருவானே * என்றும் * தயரதன் பெற்ற மரதகமணித்தடம் * என்றும் தடமாகச் சொல்லப்பட்ட எம்பெருமானும் விசேஷணங்களினால் ஒற்றுமை பெறுவிக்கப்படுகிற அழகைக் காண்மின். பிராட்டியை ஒரு தடாகமாக ரூபித்தபடியாலே தடாகத்திற்கும் பிராட்டிக்கும் ஸ்வபாவ ஸாம்யத்தை முன்னம் கிரஹிக்கவேணும்; இவ்விரண்டுக்கும் எம்பெருமானுக்கும் ஸ்வபாவஸாம்யத்தை உடனே க்ரஹிக்கவேணும், ஆக மூன்று விசேஷ்யங்களுக்கு [தடாகம், பிராட்டி, எம்பெருமான்களுக்கு]ப் பொருந்தக்கூடிய விசேஷணங்களின்பொருட்சுவையை இனியநுபவிப்பது.

தடாகம் ஸாமாந்யமானதன்று; அஃது எப்படியிருக்குமென்றால், [கபீரஸுபகம்] ஆழமுள்ளதும் அழகுள்ளதுமாயிருக்கும். [பும்ஸாம் ச்ரமஹாரி] தன்னிலே அவகாஹித்தவர்

களின் சிரமத்தை யெல்லாம் போக்கும். [மாதுர்ய ரம்யம்] இனிப்பான நீர்த்தமுடையதா யிருக்கும். [அநகம்] அழுக்கு முதலிய கல்மஷமற்றிருக்கும். [மணிபங்கத்ருச்யம்] "ஸங்கஸ் தரங்க ஊர்மிர்வா" என்கிற அமரகோசத்தின்படி ஸங்கமென்று அலைக்குப் பெயர். மணி கொழிக்கு மலைகள் மோதப்பெற்றிருக்கும். [ஸரஸிஜ ஆச்ரயம்] தாமரைகளுக்கு இருப்பிடமு மாயிருக்கும். இனி பிராட்டி பக்ஷத்தில், [கபீரஸூபகம்] கம்பீரத்தன்மையும் ஸௌபாக்யமும் பொருந்தியவள். [பும்ஸாம் ச்ரமஹாரி] தன்னை யடிபணிந்தவர்களின் சிரமங்களை யெல்லாம் புருஷகாரக்ருத்யத்தினால் போக்குமவள். [மாதுர்ய ரம்யம்] எம்பெருமானை வசீகரிக்கவல்ல வாங்மாதுர்யத்தை யுடையவள். [அநகம்] சிலரை யநுக்ரஹிப்பதும் சிலரை நிக்ரஹிப்பது மான குற்றமற்றிருப்பவள். [மணிபங்கத்ருச்யம்] அநேக திவ்யபூஷண பூஷிதையாயிருக்கை யாலே ரத்ன சகலங்கள் விளங்கப் பெற்றிருப்பள். [ஸரஸிஜாச்ரயம்] "பத்மப்ரியே பத்மினி பத்மஹஸ்தே பத்மாலயே பத்மதளாயதாக்ஷி" என்கிறபடியே பத்மஸம்பந்தம் மிக் கிருப்பவள்.

இனி எம்பெருமான் பக்ஷத்தில், [கபீரஸூபகம்] காம்பீர்ய ஸௌந்தர்யங்களில் குறை யற்றவன். [பும்ஸாம் ச்ராமஹாரி] * நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன் * என்கிறபடியே சிந் தித்தவளவிலேயே சிரமங்களைப் போக்குமவன். [மாதுர்ய ரம்யம்] "ம்ருதுர் தயாளுர் மதுரஸ் ஸ்திரஸ் ஸம:" என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுதுமொத்து அக்காரக்கனியாயிருப்பவன். [அநகம்] அகில ஹேயப்ரத்யநீகன். [மணி பங்கத்ருச்யம்] "மணிவிடம்பிநி தஸ்ய மநோஹரே வபுஷி" என்னும்படியே. [ஸரஸிஜா ஆச் ரயம்] ஸரஸிஜாயா:—கமலாயா: ஆச்ரயபூதனுமிருப்பவன். ஆக இத்தகைய ஸ்வபாவ ஸாம்யங்களாலே பிராட்டியாகிற ஸரஸ்ஸிலே எம்பெருமான் பிரதிபலிப்பதாகவும், திவ்ய தம்பதிகளிருவரும் வேகவதி ஸரித்ஸலிலத்திலே பிரதிபலிப்பதாகவும் வைத்து இங்ஙனே விலக்ஷண பாவனை பொலியப் பேசினவிது அத்புதவாக் சமத்காரம். .... ... (5)

आविश्य धारयसि विश्वममुष्य यन्ता शेषी श्रियःपतिरशेषतनुर्निदानम् ।
इत्यादिलक्षणगणैः पुरुषोत्तमं त्वां जानाति यो जगति सर्वविदेष गीतः ॥ ६

ஆவிச்ய தாரயஸி விச்வமமுஷ்ய யந்தா சேஷீ ச்ரிய:பதிரசேஷதநுர் நிதாநம்
இத்யாதிலக்ஷணகணை: புருஷோத்தமம் த்வாம் ஜாநாதி யோ ஜகதி ஸர்வவிதேஷ கீத:

| | |
|---|---|
| விச்வம் ஆவிச்ய தாரயஸி, அமுஷ்ய யந்தா சேஷீ ச்ரிய:பதி: அசேஷதநு: நிதாநம் இத் யாதிலக்ஷணகணை: த்வாம் புருஷோத்தமம் ய: ஜாநாதி, ஏஷ: ஜகதி ஸர்வவித் கீத: | (விளக்கொளிப்பெருமானே !) எல்லாப்பொருள்களையும் அநுப்ர வேசித்துத் தாங்குகிறாய், இந்த ப்ரபஞ்சத்துக்கெல்லாம் நியாமக னும் சேஷியும் திருமகள் கொழுநனும் ஸர்வ சராசர சரீரக னும் ஆதிகாரண பூதனுமிருக்கையாகிற இவை முதலான லக்ஷ ணங்களால் உன்னைப் புருஷோத்தமனாக எவன் அறிகிறானோ அவனே ஸர்வஜ்ஞனாக கீதையில் கூறப்பட்டான். |

*** இந்த ஸ்துதிக்கு சரணாகதிதீபிகை யென்று திருநாமமிட்டதற்கேற்ப சரணா கதியைப் பற்றின பல தத்த்வங்களையும் மருமங்களையும் தெரிவித்தருள விரும்பினார் ஆசிரியர். சரணாகதிக்கு அதிகாரி நியமமோ பல நியமமோ ப்ரகார நியமமோ தேசகால நியமமோ ஏது மின்றிக்கே விஷய நியமமொன்றே யுள்ளதாக நூற்கொள்கை. விஷயநியமமாவது ஸகல ஸத்குண பூர்த்தியுள்ளவிடமே சரணாகதிக்கு விஷயமாகை. அத்தகைய பூர்த்தியானது ஸர்வ

லோக சரண்யனான ஸ்ரீமந்நாராயணனொருவனிடமே யுள்ளதென்பதை ஸூசிக்கத் திருவுள்ளம் பற்றி அதற்குடலாக இதுமுதல் மூன்று சுலோகங்களை யருளிச்செய்கிறார். எம்பெருமானுடைய பரத்வம் பலபடிப்பட்டிருக்குமாகையாலே மூன்று சுலோகங்களிலும் சிலபடிகளையிட்டுப் பரத்வத்தைப் பேசுகிறாராயிற்று. பகவத்கீதை பதினைந்தாமத்யாயத்தில் பதினாறு பதினேழு பதினெட்டு சுலோகங்களில் புருஷோத்தம வித்யையைக் கூறுகின்ற கீதாசார்யன் (18ல்) * அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: * என்று தலைக்கட்டி, (19.) * யோமாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம், ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேந பாரத! * என்னும் சுலோகத்தில் 'புருஷோத்தமனான என்னை உள்ளபடி யுணருமவன் யாவனோ அவன் ஸர்வவித் [ஸர்வஜ்ஞன்]—என்றருளிச் செய்தான்; அதைக் கொண்டே இந்த சுலோகத்தின் உத்தரார்த்தம் "இத்யாதி லக்ஷணகணை: புருஷோத்தமம் த்வாம் ஜாநாதி யோ ஜகதி ஸர்வவிதேஷ ஏத:" என்று அமைக்கப்பட்டது. கீதையில் (15—17.) "யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்தி அவ்யய ஈச்வர:" என்று கூறியதைக் கொண்டே இந்த சுலோகம் "ஆவிச்ய தாரயஸி விச்வம்" என்று தொடங்கப் பட்டது. மேலே "அமுஷ்ய யந்தா சேஷீ ச்ரிய:பதி: அசேஷதநு: நிதாநம்" என்றதுபோலே விச்வதாரக: என்று அவற்றோடே சேர்த்து ஏகவாக்யமாக அருளிச் செய்யலாமாயிருக்க, 'ஆவிச்ய தாரயஸி விச்வம்' என்று வாக்யபேதம் பண்ணினது எதனாலென்னில், நம்முடைய விசிஷ்டாத்வைத தர்சந நிர்வாஹத்திற்கு இதுவே தலையாக நிற்பதனால் இதன்வாசி தோற்ற வாக்யபேதம் பண்ணினபடி. * ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * * ஐததாத்ம்யமிதம் ஸர்வம் * இத்யாதிச்ருதிகளை அத்வைதத்திலே ஒதுக்காமல் நிர்வஹிப்பதற்கு அந்தர்யாமி ப்ராஹ்மணமன்றோ கைகொடுப்பது. அதன்ஸாரமான பொருளன்றோ 'ஆவிச்ய தாரயஸி விச்வம்' என்பது. யந்தா—நியாமக:. சேஷீ—கைங்கர்யப்ரதிஸம்பந்தி. ச்ரிய:பதி:—லக்ஷ்மீ வல்லபன். அசேஷதநு:—ஸகலஜகச்சரீரகன். நிதாநம்—*ஜந்மாத்யதிகரண ஸித்தாந்தத்தின் படியே முழுமுதற்கடவுள். ஆக இத்தனையும் எம்பெருமானுக்கு அஸாதாரண லக்ஷணங்களாகையாலும், மற்றும் மோக்ஷப்ரதத்வாதிகளுமிருக்கையாலும் "இத்யாதி லக்ஷணகணை:" என்றருளிச்செய்தாராயிற்று. ஆக இவற்றைக் கொண்டு தேவரீரைப் புருஷோத்தமனாக அறிபவன் கீதாசார்யனாலே ஸர்வவித்தென்று கொண்டாடப் பட்டானென்கை. (6)

विश्वं शुभाश्रयवदीश ! वपुस्त्वदीयं सर्वा गिरस्त्वयि पतन्ति ततोऽसि सर्वः ।
सर्वे च वेदविधयस्त्वदनुग्रहार्थाः सर्वाधिकस्त्वमिति तत्त्वविदस्तदाहुः ॥ ७

விச்வம் சுபாச்ரயவதீச ! வபுஸ் த்வதீயம் ஸர்வா கிரஸ் த்வயி பதந்தி ததோஸி ஸர்வ:
ஸர்வே ச வேதவிதயஸ் த்வதநுக்ரஹார்த்தா: ஸர்வாதிகஸ்த்வமிதி தத்வவிதஸ் ததாஹு:

ஹே ஈச! விச்வம் சுபாச்ரயவத் த்வதீயம் வபு:, ஸர்வா: கிர: த்வயி பதந்தி, தத: ஸர்வ: அஸி, ஸர்வே ச வேத விதய: த்வத் அநுக்ரஹார்த்தா:, தத் த்வம் ஸர்வாதிக: இதி தத்வவித: ஆஹு:

ஸாராய் ஸர்வேச்வரனே! ஸகலப்ரபஞ்சமும் திவ்யமங்கள விக்ரஹம்போல் தேவரீருக்கு உடம்பாகின்றது ஸகல வாக்குக்களும் (அபர்யவஸாந வ்ருத்தியினால்) தேவரீரிடத்திலே பர்யவஸிக்கின்றன. ஆகையாலே ஸர்வமும் தேவரீரேயாகக் குறையில்லை. (இதர தேவதைகளை யுத்தேசித்தனவைபோலக் காணப் படுகிற) வேதவிதிகளெல்லாம் தேவரீருடைய அநுக்ரஹத்தையே பலனாகக் கொண்டவை, ஆகையாலே தேவரீர் தான் ஸர்வோத்துங்கரென்று ஞானிகள் கூறுகின்றனர்.

* * * இந்தச்லோகமும் பரத்வத்தை விசதீகரிக்குமது. ஸர்வசரீரகராய் ஸர்வ சப்த வாச்யராய் ஸர்வ கர்ம ஸமாராத்யராய் தேவரீர் இருப்பதனாலே தேவரீரே ஸர்வோத்க்ரு

ஷ்டரென்று நிஷ்கர்ஷிக்கப்படுகிறீரென்றதாயிற்று. எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்திற்கு சுபாச்ரய மென்று நம் முதலிகளின் வழக்கு. "விக்ரஹந்தான் ஸ்வரூப குணங்களிலுங் காட்டில் அத்யந்தாபிமதமாய் ஸ்வாநுரூபமாய் நித்யமாய் ஏகரூபமாய் சுத்த ஸத்வாத்மகமாய் சேதநதேஹம் போலே ஜ்ஞான மயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டு வைத்தாப் போலேயிருக்க பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாசகமாய் நிரவதிக தேஜோ ரூபமாய் ஸௌகுமார்யாதி கல்யாண குணகண நிதியாய் யோகித்யேயமாய் ஸகல ஜந மோஹநமாய் ஸமஸ்த போக வைராக்யஜநகமாய் நித்யமுக்தாநுபாவ்யமாய் * வாசத்தடம்போலே ஸகலதாபஹரமாய் அநந்தாவதாரகந்தமாய் ஸர்வ ரக்ஷகமாய் ஸர்வாச்ரயமாய் அஸ்த்ரபூஷண பூஷிதமாயிருக்கும்" என்கிற தத்வத்ரய திவ்ய ஸூக்திகளைக் கொண்டு திவ்யமங்கள விக்ரஹத்தின் வைலக்ஷண்யமறியக்கடவது. ப்ருஹதாரண்யகத்தில் (5-7.) "யஸ்ய......சரீரம்" என்று சரீரமாகச் சொல்லப்படுகிற ஸகல சேதநாசேதனங்களும் பகவதபிப்ராயத்தாலே அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹம்போலே அபிமானிக்கப்படுகின்றனவாக முதல் பாதத்தினுல் சொல்லிற்றாயிற்று. உலகில் ப்ரயோகிக்கப்படும் எந்த சப்தங்களும் அவ்வோ பொருள்களளவிலே நிற்கையன்றிக்கே * வசஸாம் வாச்யமுத்தமம் * என்கிறபடியே தத்ததந்தர்யாமியளவும் சென்று நிற்கையாகிற அபர்யவஸாநவ்ருத்தியைக் காட்டுகிறது இரண்டாவது பாதம். பரமைகாந்திகள் அநுஷ்டிக்கிற நித்யநைமித்திக கருமங்களில் இந்த்ர வருணயமாதி தேவதைகளுக்கு உத்தேச்யத்வம் காண்கிறப்போலே யிருந்தாலும் "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவச" "தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதிபூர்வகம்" என்று தானே சோதிவாய் திறந்து பணித்த கணக்கிலே ஸர்வ கர்ம ஸமாராத்யதை எம்பெருமானுக்கேயாயிருக்குமென்கிறது மூன்றாவது பாதம். ஆக இவற்றைக்கொண்டு 'தேவரீருக்கே பரத்வம் பொருந்தும்' என்று நான்காவது பாதத்தாலே நிகமிக்கப்பட்டது. (7)

ज्ञानं बलं नियमनक्षमताऽथ वीर्यं शक्तिश्च तेज इति ते गुणषट्कमाद्यम् ।
सर्वातिशायिनि हिमोपवनेश ! यस्मिन्नन्तर्गतो जगदिव त्वयि सद्गुणौघः ॥ ८

ஜ்ஞாநம் பலம் நியமநக்ஷமதா'த வீர்யம் சக்திச் ச தேஜ இதி தே குணஷட்கமாத்யம்
ஸர்வாதிசாயிநி ஹிமோபவநேச யஸ்மிந் அந்தர்கதோ ஜகதிவ த்வயி ஸத்குணௌக:.

| | |
|---|---|
| ஹே ஹிமோபவநேச! ஜ்ஞாநம் பலம் நியமநக்ஷமதா அத வீர்யம் சக்தி: தேஜ: இதிகுணஷட்கம் தே ஆத்யம்; ஸர்வாதிசாயிநி யஸ்மிந் ஸத்குண ஓக: த்வயி ஜகத் இவ அந்தர்கத:. | திருத்தண்காவுக்குத் தலைவரான விளக்கொளிப் பெருமானே! ஜ்ஞானம் பலம் ஐச்வர்யம் வீர்யம் சக்தி தேஜஸ்ஸு என்கிற இந்த ஆறு திருக்குணங்களும் தேவரீருக்கு முதன்மையானவை. (இவற்றுக்கு ஏற்றமென்னவென்னில்;) ஜகத்தெல்லாம் தேவரீருக்குள்ளே அடங்கியிருப்பதுபோல ஸகல கல்யாண குண ஸமூஹமும் ஸர்வோத்க்ருஷ்டமான இந்த ஷாட்குண்யத்தில் அடங்கியுள்ளது. |

* * * ஸகல கல்யாணகுணகண விபூஷிதத்வமும் பரத்வைகாந்திகமாகும். ஆகையிறே ஆழ்வார் தொடங்கும்போதே * உயர்வறவுயர்நல முடையவன் * என்று நிர்க்குண ப்ரஹ்மவாதிகளின் மிடற்றைப் பிடித்தாற்போலே அருளிச் செய்தது. ஜ்ஞாந சக்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஷாட்குண்யத்திற்கு பகமென்று பெயர். இவற்றுள், ஜ்ஞானமாவது—ஸர்வகாலமு முண்டான ஸர்வபதார்த்த ஸாக்ஷாத்காரம். பலமாவது—உபயவிபூதியையும் அநாயாஸேந வஹிக்கவல்லமிடுக்கு. ஐச்வர்யமாவது—ஜகத்தையெல்லாம்

தன் குடை நிழலிலே அமுக்கி ஆளவல்லனாகையாகிற நியந்த்ருத்வம். வீர்யமாவது—ஜகத்தாரண நியமனங்களிலே சரீரமான க்லேசமொன்றுமின்றிக்கேயிருக்கை. சக்தியாவது—ஏறிட்டுக்கொண்டதொரு காரியம் முட்டுப்படாதபடி செய்து தலைக்கட்ட வல்லமையாகிற ஸாமர்த்தியம். தேஜஸ்ஸாவது—பஹுப்ரயத்நஸாத்யமான காரியத்தை ஸஹகாரிநிரபேக்ஷமாக அல்பப்ரயத்நத்தாலே தலைக்கட்டவல்ல மிடுக்கு. ஆக இந்த ஆறு குணங்களும் "ப்ரவர குணஷட்கம் ப்ரதமஜம் குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணநவிகுணாநாம் ப்ரஸவபூ:" என்று ஆழ்வானருளிச் செய்தபடியே மற்றுமுண்டான வாத்ஸல்யஸௌசீல்யாதிகளான எண்ணிறந்த திருக்குணங்களுக்கு ப்ரஸவபூமியாயிருக்கும். ஸகல சராசரங்களும் தேவரீருக்குள்ளே அடங்கியிருப்பதுபோல ஸகல குணங்களும் ஷாட்குண்யத்திலே சொருகியிருக்குமென்றதாயிற்று. பகவான் என்றபோதே ஸகல குணாத்மகனாகத் தேறினபடி சொல்லிற்றாயிற்று.(8)

दीपावभास ! दयया विधिपूर्वमेतद्विश्वं विधाय निगमानपि दत्तवन्तम् ।
शिष्यायिताः शरणयन्ति मुमुक्षवस्त्वामाद्यं गुरुं गुरुपरम्परयाऽधिगम्यम् ॥ ९

தீபாவபாஸ! தயயா விதிபூர்வமேதத் விச்வம் விதாய நிகமாநபி தத்தவந்தம்,
சிஷ்யாயிதா: சரணயந்தி முமுக்ஷவஸ் த்வாமாத்யம் குரும் குருபரம்பரயாऽதிகம்யம் 9

ஹே தீபாவபாஸ! விதிபூர்வம் ஏதத் விச்வம் தயயா விதாய நிகமாந் அபி தத்தவந்தம் ஆத்யம் குரும் த்வாம் சிஷ்யாயிதா: முமுக்ஷவ: சரணயந்தி. } விளக்கொளிப் பெருமானே! பிரமன் முதலான இந்த பிரபஞ்சத்தைக் கருணையினாலே படைத்து வேதங்களையும் தந்தருளினவரும் குருபரம்பரையில் முதன்மை பெற்ற ஆசாரியருமான தேவரீரை சிஷ்யர்கள் போன்ற முமுக்ஷுக்கள் அடைக்கலம் புகுகிறார்கள்.

* * * கீழ் மூன்று ச்லோகங்களாலும் ப்ரகாசிக்கப்பட்ட பரத்வத்தையுடைய எம்பெருமான் பக்கலிலே சரணாகதி செய்வதுதான் ப்ராப்தம் என்னுமர்த்தத்தை "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை—முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே." என்கிற ச்ருதிவாக்ய ப்ரத்யபிஜ்ஞாபக முகத்தாலே தெரிவித்தருளுகிறார் இந்த ச்லோகத்தினால். முமுக்ஷுக்கள் சரணாகதி செய்கிறார்கள் என்கிற ப்ரதமபுருஷ நிர்தேசமானது மத்யமபுருஷ—உத்தம புருஷ நிர்தேசங்களுக்கு உபலக்ஷணமாகக் கொள்ளவடுக்கும். நீங்கள் சரணாகதி செய்யுங்கள், நான் சரணாகதி செய்கிறேன் என்றவாறும். "ஆசார்யாணாமஸாவஸாவிதி ஆபகவத்த:" என்று ச்ருதியாகையாலும், அதையடியொற்றி "கமப்யாத்யம் குரும் வந்தே கமலாக்ருஹமேதிநம்" என்று யதிராஜஸப்ததியின் உபக்ரமத்தில் அருளிச்செய்பவராதலாலும் இங்கு "ஆத்யம் குரும்" என்றருளிச்செய்கிறார். நம்முடைய குருபரம்பரை * லக்ஷ்மீநாத ஸமாரம்பையாயன்றோ இருப்பது. ஸ்வாசார்யன் தொடங்கி எம்பெருமானளவாகவும், எம்பெருமான் தொடங்கி ஸ்வாசார்யனளவாகவும் அநுஸந்திக்கும் முறை இருவகைப்பட்டிருந்தாலும் எம்பெருமானுடைய ப்ராதம்யத்திற்கு ப்ரச்யுதி வாராதிறே. .... ... ... ... (9

सत्तास्थितिप्रयतनप्रमुखैरुपात्तं स्वार्थं सदैव भवता स्वयमेव विश्वम् ।
दीपप्रकाश ! तदिह त्वदवाप्तये त्वामव्याजसिद्धमनपायमुपायमाहुः ॥ १०

ஸத்தாஸ்திதிப்ரயதநப்ரமுகைருபாத்தம் ஸ்வார்த்தம் ஸதைவ பவதா ஸ்வயமேவ விச்வம்
தீபப்ரகாச! ததிஹ த்வதவாப்தயே த்வாமவ்யாஜ ஸித்தமநபாயமுபாயமாஹு:. 10

பொருள்கள் தனக்கென்று ஒரு போகமின்றிக்கே பிறருடைய போகத்திற்கே எப்படி உறுப்பாகின்றனவோ, அப்படியே சேதநனும் தன்னிடத்தில் போக்த்ருத்வமிருப்பதாக நினையாதே அசேதநத்திற்குப் போலே தனக்கும் போக்யதைதான் வடிக்கட்டின வடிவு என்று அத்யவஸித்து அதற்கநுகுணமாக வர்த்திக்கும்போதுதான் ப்ரகாசிக்கும். "செய்த்தலையெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே வர்த்திக்கையாம். ஜீவாத்மா அசேதனம்போலன்றிக்கே ஜ்ஞாதாவாகத் தேறுகையாலே அதடியாக கர்த்தாவாகவும் தேறுவன். கர்த்தாவானபோதே போக்தாவாகவும் தேறுவன். ஆனால் இது வடிக்கட்டவேண்டிய நிலையே யல்லது வடிக்கட்டின நிலையன்று. ந்யாஸதசகத்திலே "ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதீய ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்." என்கிற ச்லோகத்திலே ஸ்வ ஸப்தத்தை ஒன்பதின்கால் இட்டருளி வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தத்தை ரக்ஷவார் மிகச் சிலரேயாவர். ப்ரக்ருத ச்லோகத்தில், ஜ்ஞாதாவும் கர்த்தாவுமான ஜீவனிடத்திலே எம்பெருமான் போக்த்ருத்வத்தைத் தானே விரும்பி வைத்திருந்தாலும் ஸ்வரூபஜ்ஞனான ஜீவன் அசித்வத் பாரதந்த்ர்யமே தனக்கு வேஷமென்றுணர்ந்து 'போக்த்ருத்வம் எம்பெருமானுக்கே யல்லது நமக்கன்று; நமக்கு போக்யதையே வடிவம்' என்றிருக்கக் கடவன் என்பதை ஒரு விலக்ஷண த்ருஷ்டாந்த முகத்தாலே சிக்ஷித்தருளுகிறார் — பாஞ்சாலிகாசுகேத்யாதி. பாஞ்சாலிகா—பதுமை, சுக—கிளி. கிளிவடிவமாக ஒரு பதுமையைப் பண்ணி அதற்குச் சில ஹோமங்களைக் கொடுத்து அது புஜிப்பதுபோல ஆட்டி உகந்திருக்கும் மஹாப்ரபு போலேயென்கிறார். "பாஞ்சாலிகாம்சுக" என்கிற பாடத்தில் மரப்பாச்சிக்குச் சேலையை யுடுத்திக் கண்டு களிப்பதைச் சொல்லிற்றாகக் கொள்க. ... ... ... (11)

त्वां मातरं च पितरं सहजं निवासं सन्तस्समेत्य शरणं सुहृदं गतिं च ।
निस्सीमनित्यनिरवद्यसुखप्रकाशं दीपप्रकाश ! सविभूतिगुणं विशन्ति ॥ १२

த்வாம் மாதரம் ச பிதரம் ஸஹஜம் நிவாஸம் ஸந்தஸ் ஸமேத்ய சரணம் ஸுஹ்ருதம் கதிம் ச
நிஸ்ஸீமநித்ய நிரவத்ய ஸுகப்ரகாசம் தீபப்ரகாச! ஸவிபூதிகுணம் விசந்தி. 12.

| | |
|---|---|
| ஹே தீபப்ரகாச! ஸந்த: மாதரம் பிதரம் ஸஹஜம் நிவாஸம் ஸுஹ்ருதம் கதிம் ச த்வாம் சரணம் ப்ரபத்ய நிஸ்ஸீம நித்ய நிரவத்ய ஸுகப்ரகாசம் ஸவிபூதி குணம் த்வாம் விசந்தி | விளக்கொளியெம்பெருமானே! ஸத்துக்களானவர்கள், மாதாவும் பிதாவும் ப்ராதாவும் நிவாஸஸ்தான பூதரும் ஸுஹ்ருத்தும் உபாயோபேய பூதருமான தேவரீரை சரணம் புகுந்து, எல்லையற்ற—குற்றமற்ற ஆனந்தப்ரகாசரும் விபூதியோடும் கல்யாணகுணங்களோடும் கூடியவருமான தேவரீரை யநுபவித்துக் களிக்கிறார்கள். |

* * * "மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்னும் உபநிஷத் வாக்யமே இந்த ச்லோகமாக வடிவெடுத்துள்ளது. நாராயண சப்தார்த்தத்தையநுஸந்திக்குமாசாரியர்கள் ஸ்ரீமந்நாராயணனையே எல்லாவுறவு முறையுமாக அநுஸந்திப்பர்கள். அதற்கு மூலம் மேலே காட்டிய ச்ருதி வாக்யமேயாகும். பரப்ரஹ்மத்தை நிர்க்குணமாகவும் நிர்விபூதிகமாகவும் கொள்ளுமவர்களைப் போலன்றிக்கே ஸமஸ்தகல்யாண குணாத்மகமாகவும் விபூதிவிஸ்தாரஸநாதமாகவும் கொள்ளுகின்ற ஸ்ரீவைஷ்ணவபரமைகாந்திகள் தேவரீரையே ஸகலவித பந்துவுமாகப் பற்றி தேவரீருடைய திருக்கல்யாணகுண விசேஷங்களையும் விபூதிகளையும் அநுபவித்து ஆநந்திக்கிறார்களென்றதாயிற்று. விசந்தி என்றது—நிர்விசந்தி

என்றபடி. நிவாஸ: என்றது—"நிவாஸவ்ருக்ஷஸ் ஸாதூநாம்" என்ற தாரையின் வாக்குப் படியே புகலற்றார்க்குப் புகலிடமாயிருக்குமவனென்கை. கதி: என்றது—கரணவ்யுத்பத்தியாலும் கர்மணிவ்யுத்பத்தியாலும் ஏகயோக்யா உபாயோபேயங்களைச்சொல்லக்கடவது.(12)

जन्तोरमुष्य जनने विधिशम्भुदृष्टौ रागादिनेव रजसा तमसा च योगः ।
द्वैपायनप्रभृतयस्त्वदवेक्षितानां सत्त्वं विमुक्तिनियतं भवतीत्युशन्ति ॥ १३

ஜந்தோரமுஷ்ய ஜநநே விதிசம்புத்ருஷ்டௌ ராகாதிநேவ ரஜஸா தமஸா ச யோக:
த்வைபாயநப்ரப்ருதயஸ் த்வதவேக்ஷிதாநாம் ஸத்வம் விமுக்திநியதம் பவதீயுசந்தி. (13)

அமுஷ்ய ஜந்தோ: ஜநநே விதிசம்புத்ருஷ்டௌ ரஜஸா தமஸா ச ராகாதிநா இவ யோக: பவதி; த்வத் அவேக்ஷிதாநாம் விமுக்திநியதம் ஸத்வம் பவதி இதி த்வைபாயநப்ரப்ருதய: உசந்தி

எம்பெருமானே!, அநாதிகாலமாக ஸம்ஸரித்து வருகின்ற இந்த ப்ராணி வர்க்கத்தினுடைய ஜனனகாலத்திலே பிரமனோ சிவனோ பார்க்க நேர்ந்தால் ரஜோகுணமும் தமோகுணமும் ரங்குகள் ஒட்டிக்கொள்வது போல ஒட்டிக்கொள்ளுமென்றும், தேவரீர் கடாக்ஷிக்க நேர்ந்தால் மோக்ஷ ப்ராபகமான ஸத்வகுணம் பொருந்துமென்றும் வியாஸர் முதலிய முனிவர்கள் மொழிகின்றார்கள்.

* * * "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:" என்கிற ப்ரமாணம் ஜாயமாந காலத்திலே ஸ்ரீமந் நாராயணன் கடாக்ஷிக்க நேர்ந்தால் ஸத்வகுணோந்மேஷமுண்டாகிறதென்று தெரிவிக்கின்றது. "பச்யத்யேநம் ஜாயமாநம் ப்ரஹ்மா ருத்ரோ தவா புந:, ரஜஸா தமஸா சாஸ்ய மாநஸம் ஸமபிப்லுதம்." என்கிற ப்ரமாணம்—பிரமனோ ருத்ரனோ அப்போது பார்க்க நேர்ந்தால் ரஜஸ்தமோகுணங்களினால் அபிபவிக்கப் படுகையாகுமென்று தெரிவிக்கின்றது. ஆக இவ்விரண்டு ப்ரமாணங்களும் இந்த சுலோகமாக வடிவெடுத்திருக்கிறபடி. பகவச்சரணாகதியில் ஆபிமுக்யம் ஜாயமாந கடாக்ஷ விசேஷத்தினால் விளைகின்றதென்கையிலே தாத்பர்யம். [ராகாதிநேவ] துணி முதலியவற்றில் ரஞ்ஜக பதார்த்தங்களினால் விளையும் ராகலேபம் கழற்றவொண்ணாதாப்போலே யாயிற்று இந்த ரஜஸ்தமோலேபமும் என்றதாயிற்று. (13)

कर्मस्वनादिविषमेषु समो दयालुः स्वेनैव क्लृप्तमपदेशमवेक्षमाणः ।
स्वप्राप्तये तनुभृतां त्वरसे मुकुन्द! स्वाभाविकं तव सुहृत्त्वमिदं गृणन्ति ॥ १४

கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாளு: ஸ்வேநைவ க்ல்ப்தமபதேசமவேக்ஷமாண:
ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவ ஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி.

ஹே முகுந்த! ஸம: தயாளும் தவம் தநுப்ருதாம் அநாதிவிஷமேஷு கர்மஸு ஸ்வேந ஏவ கல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண: ஸ்வப்ராப்தயே த்வரஸே; இதம் தவ ஸ்வாபாவிகம் ஸுஹ்ருத்த்வம் க்ருணந்தி.

வீடளிக்கும் பெருமானே! ஸாம்யகுணமும் தயாகுணமும் பொருந்திய தேவரீர் கெடுகாலாகப் போருகிற விஷம கருமங்களினிடையிலே தேவரீராகவே கல்பித்துவைத்த வொரு வியாஜத்தைப் பெற்றவாறே ஸ்வப்ராப்திக்கு விரைகின்றீர்; இதுதான தேவரீருடைய இயற்கையான ஸௌஹார்த்த குணமென்கிறார்கள்.

* * * கீழ் "த்வாம் மாதாஞ்ச பிதாஞ்ச" (12) என்கிற சுலோகத்தில் உபாத்தமான ச்ருதியில் ஸுஹ்ருத் என்னப்பட்ட மஹாகுணத்தைவிவரிக்கிறது இதுவும் அடுத்தசுலோகமும். எம்பெருமான் ஸஹஜஸௌஹார்த குணத்தினால்தான் சரணாகதியில் ஆபிமுக்யத்தை விளை

வித்தருளுகிறுனென்கையிலே நோக்காக இஸ்தருளிச் செய்கிறபடி. "சோபகம் த்ருத்யஸ்ய ஸ:—ஸாஹ்ம்ருத்" என்று வ்யுத்பத்தியாகக் கடவது. சோபகிரயுக்தியான த்ருதயத்தையுடையவரென்கை. விமுகர்களையும் வாரிப் பிடியாகப் பிடிக்க வேண்டி, ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாகச் சில வ்யாஜங்களை ஸ்வயமேவ கல்பித்து வைத்திருப்பதை சாஸ்த்ரமுகத்தாலே அறிகிறோம். "என்னுரைச் சொன்னுய், என் பேரைச் சொன்னுய், என்னடியார்களை நோக்கினுய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்று நாளுக,ஏறிடும் யாத்ருச்சிக-ப்ராஸங்கிக ஆநுஷங்கிகாதி ஸுக்ருத விசேஷங்களையே இங்கு அபதேசமென்கிறது. "நன்மையென்று பேரிடலாவதோரு தீமையுங் காணுதே" என்கிறபடியே பலசேதனர்களிடத்திலே இதுதானும் காண அரிதாயிறேயிருப்பது. தனக்கேற இடம் பெறுவது சிலரிடத்திலேயாயிற்று. அதுதானும் தன்னுடைய ஸாமர்த்ய விசேஷத்தினுலாயது. இதுக்கடியான குணம் ஸௌஹார்த்தம். அதனைப் பேசினுராயிற்று. இங்கு [த்வரஸே முகுந்த!] என்றது—ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தமா? சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமா? என்கிற விசாரத்தில், சேதநலாபமே ஈச்வரனுக்குப் புருஷார்த்தமென்கிற ஸித்தாந்தத்தை த் தேறுவிக்கின்றது. சேதநன் த்வரிக்கவேண்டியதுபோய் ஈச்வரன் த்வரிப்பதாகச் சொல்லுகிறது சாஸ்த்ரார்த்த தத்துவத்தைக் காட்டினபடி. "இன்று விண்ணுலகம் தருவானுய் விரைகின்முன் விதிவகையே" என்கிற திருவாய்மொழியை யநுவதித்தபடி. [ஸம:] * ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:* என்கிற கீதாச்லோகத்தை நினைப்பது. ஸம:-ஆச்ரயணீயத்வே ஸம:.

निद्रायिताखिगमवर्त्मनि चारुदर्शी प्रस्थानशक्तिरहितान्प्रतिबोध्य जन्तून ।
जीर्णस्तनन्धयजडान्धमुखानिवास्माञ्जेतुं मुकुन्द ! यतसे दयया सह त्वम् ॥ १५

நித்ராயிதாந் நிகமவர்த்மநி சாருதர்சீ ப்ரஸ்தாநசக்திரஹிதாந் ப்ரதிபோத்ய ஜந்தூந்
ஜீர்ணஸ்தநந்தயஜடாந்தமுகாநிவாஸ்மாந் நேதும் முகுந்த! யதஸே தயயா ஸஹ த்வம்: 15

ஹே முகுந்த! தயயா ஸஹ சாருதர்சீ த்வம் நிகமவர்த்மநி நித்ராயிதாந் ப்ரஸ்தாநசக்திரஹிதாந் ஜந்தூந் ப்ரதிபோத்ய, ஜீர்ண-ஸ்தநந்தய-ஜட-அந்தமுகாந் இவ (அஸ்மாந்) நேதும் யதஸே

எம்பெருமானே! கருணையோடுகூட (நிலைகளிலே கண்செலுத்தாமல்) நன்மைகளையே கடாக்ஷித்தருளாநின்ற தேவரீர், வேதமார்க்கத்தில் கண்மூடித் தூங்குகிறவர்களும் பயணம் செய்ய சக்தியற்றவர்களுமான ஜந்துக்களைத் தட்டியெழுப்பி, கிழவர் சிறுவர் மூடர் குருடர் முதலான பிராணிகளைப்போல எங்களை வழிப்படுத்த முயலாநின்றீர்.

* * * கீழ்ச்லோகத்தில் விவரிக்கப்பட்ட ஸௌஹார்த்தமே இதிலும் ப்ரகாராந்தரேண விவரிக்கப்படுகிறது. "நிகமவர்த்மநி நித்ராயிதாந்" என்றது—வைதிக விதிகளை யநுஷ்டிக்கப் பாங்கான ஞானமற்றவர்கள் என்றபடி. "ப்ரஸ்தாநசக்திரஹிதாந்" என்றது: ஸ்வல்பஜ்ஞானமுண்டானாலும் ஆசரிக்க சக்தியற்றவர்களென்றபடி. இப்படிப்பட்டவர்களை [தயயா ஸஹ ப்ரதிபோத்ய] ஒருபடி ஜ்ஞானனுஷ்டானங்களை யுடையவர்களாகக் கொண்டு தட்டியெழுப்பி. இதற்கு ஹேது ஏதென்ன; [சாருதர்சீ] என்கிற ஸாபிப்ராய விசேஷணத்தினுல் அது சொல்லுகிறது. அப்போதைப்போது பிராட்டி செய்தருளும் உபதேசங்கள் ["ஹே தேவ! நிர்தோஷ: க இஹ ஜகதி!" இத்யாதிகள்] பலிக்கப் பெற்றவனுகையாலே முணற் சோற்றிலே கல்லாராயத் தகாது என்றுகொண்டு உள்ள சிலநன்மைகளையே சிறிதைப்

பெரிதாக்கிப் பார்ப்பவனுகையாலே யென்றவாறு. [ஜீர்ண ஸ்தநந்தய ஜட ஸமூகாநிவ அஸ்மாந் நேதும் யதஸே] கிழவர்கள் ஸ்தநந்தய ப்ரஜைகள் அறிவிலிகள் குருடர்கள் முதலானவர்கள் ஸர்வாத்மநா பராதீந ப்ரவ்ருத்திகர்களாகையாலே அவர்களை வழிநடத்த முயலுமாபோலே எங்களையும் வழி நடத்தி யநுக்ரஹிக்க முயன்றருள்வது ஸஹஜ ஸௌஹார்த கார்யமென்றதாயிற்று. "அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்" என்ற வராஹ சரமச்லோகத்தில் நோக்காக "நேதும் யதஸே" என்றுராயிற்று. .... ... (15)

भक्तिः प्रपत्तिरथ वा भगवंस्तदुक्तिस्तन्निष्ठसंश्रय इतीव विकल्प्यमानम् ।
यत्किंचिदेकमुपपादयता त्वयैव त्रातास्तरन्त्यवसरे भविनो भवाब्धिम् ॥ १६

பக்தி: ப்ரபத்திரத வா பகவந்! ததுக்திஸ் தந்நிஷ்ட்டஸம்ச்ரய இதீவ விகல்ப்யமாநம்
யத்கிஞ்சிதேகமுபபாதயதா த்வயைவ த்ராதாஸ் தரந்த்யவஸரே பவிநோ பவாப்திம். 16

பகவந் ! பக்தி: ப்ரபத்தி: அதவா ததுக்தி: தந்நிஷ்டஸம்ச்ரய: இதி இவ விகல்ப்யமாநம் யத்கிஞ்சித் ஏகம் உபபாதயதா த்வயா ஏவ த்ராதா: பவிந: பவாப்திம் அவஸரே தரந்தி

ஷட்குணைச்வர்ய பகவானே ! பக்தியோ சரணாகதியோ சரணம் என்கிற உக்தியோ இவையுடையாரையடிபணிதலோ இப்படியாக விகல்பிக்கப்படுமவற்றுள் ஏதேனுமொன்றை உள்ளதாகக் கொள்ளுகிற தேவரீராலேயே ரக்ஷிக்கப் படுகின்ற ஸம்ஸாரிகள் ஸமயவிசேஷத்திலே பிறவிக்கடலைக் கடக்கின்றுர்கள்.

* * * இச்ச்லோகத்தில் "நேதும் யதஸே" என்றுர்; அந்த யத்நத்திற்கு ஒரு ஸைகம் முதல்வேணுமே; அதுதன்னைச் சொல்லுகிறது இதில். சாஸ்த்ரங்களில் பகவத்ப்ராப்திக்கு ஒரே உபாயம் சொல்லப்பட்டிருக்கவில்லை. பக்தி யென்றும் ப்ரபத்தியென்றும், 'பக்தோஸ்மி, சரணாகதோஸ்மி' என்கிற உக்திமாத்ரமென்றும், இவையுடைய ஓர் உத்தமாதிகாரியை யாச்ரயித்திருத்தல் என்றும் சிலவுண்டே, இவற்றுள் ஏதேனுமொன்றைத் தானே கல்பித்துக் கொண்டு தானே ஸம்ஸாரிகளைக் காத்தருள்கின்றமை சொல்லிற்றுயிற்று. (அவஸரே) என்றது தேஹாவஸாநஸமயே (அதவா) கர்மாவஸாநஸமயே என்றபடி. ... ... (16)

नानाविधैरकपटैरजहत्स्वभावैरप्राकृतैर्निजविहारवशेन सिद्धैः ।
आत्मीयरक्षणविपक्षविनाशनार्थैः संस्थापयस्यनघ ! जन्मभिराद्यधर्मम् ॥ १७

நாநாவிதைரகபடைரஜஹத்ஸ்வபாவை: அப்ராக்ருதைர் நிஜவிஹாரவசேந ஸித்தை:
ஆத்மீயரக்ஷணவிபக்ஷவிநாசநார்த்தை: ஸம்ஸ்தாபயஸ்யநக ! ஜந்மபிராத்யதர்மம் 17

ஹே அநக ! நாநாவிதை: அகபடை: அஜஹத்ஸ்வபாவை: அப்ராக்ருதை: நிஜவிஹாரவசேந ஸித்தை: ஆத்மீயரக்ஷண விபக்ஷவிநாசந அர்த்தை: ஜந்மபி: ஆத்யதர்மம் ஸம்ஸ்தாபயஸி

அகிலஹேயப்ரத்யநீகரான பெருமானே ! தேவமநுஷ்யாதி ஸஜாதீயத்வேந பலவகைப்பட்டவைகளும் க்ருத்ரிமமல்லாதவைகளும் ஸ்வஸ்வபாவத்தை விடாதவைகளும் அப்ராக்ருதங்களும் விஹாரார்த்தமாகப் பரிக்ரஹிதங்களும், சிஷ்டபரிபாலன துஷ்ட நிக்ரஹார்த்தங்களுமான திருவவதாரங்களினால் ஸநாதநதர்மத்தை ஸ்தாபித்தருளாநின்றீர்.

* * * இச்ச்லோகத்தில் "த்ராதா:" என்று ரக்ஷணம் ப்ரஸ்துதமாகையாலே அவதாரமுகேந பண்ணும் ரக்ஷணத்தை இதில் ப்ரஸ்தாவிக்கிறுர். அவதாரங்களுக்கு ஆறுவிசேஷணங்கள் இட்டருளுகிறுர். பகவத்கீதையில் அவதாராத்யாயமென வழங்கப்படுகிற நாலாமத்யாயத்தில் "பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" என்று தொடங்கியுள்ள நாலைந்து ச்லோகங்

களைத் திருவுள்ளம்பற்றி இந்த விசேஷணங்களிடப்படுகின்றன. அகபடை:—ஸத்யை: என்றபடி. அவதாரங்களை "இந்த்ரஜாலாதிவத் மித்யா" என்னுமவர்களைத் தள்ளுகிறது. [அஜஹத்ஸ்வபாவை:] "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய" என்றானிறே கீதாசார்யன். "ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த" என்றருளிச்செய்தாராழ்வாரும். அங்கு வைத்து—அங்குள்ளபடியே அமைத்துக் கொண்டு என்றபடி. உபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி "सुन्दरं ज्योतिर्मयविग्रहं परमपदे स्थापयित्वा" என்றெழுதிவைத்தது ப்ராமாணிகமத்தனை. [நிஜவிஹாரவசேந ஸித்தை:] "பலபலமாயமயக்குக்களால் இன்புறுமிவ் விளையாட்டுடையான்" என்றார் நம்மாழ்வார். "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே." என்ற சுலோகமே இதில் உத்தரார்த்தமாக வடிவெடுத்ததாயிற்று. ... ... ... (17)

निम्नोन्नतानि निखिलानि पदानि गाढं मज्जन्ति ते महिमसागरशीकरेषु ।
नीरन्ध्रमाश्रयसि नीचजनांस्तथाऽपि शीलेन हन्त ! शिशिरोपवनेश्वर ! त्वम् ॥ १८

நிம்நோந்நதாநி நிகிலாநி பதாநி காடம் மஜ்ஜந்தி தே மஹிமஸாகர சீகரேஷு
நீரந்த்ரமாச்ரயஸி நீசஜநாந் ததாபி சீலேந ஹந்த! சிசிரோபவநேச்வர! த்வம். 18

சிசிரோபவநேச்வர! தே மஹிமஸாகரசீகரேஷு நிம்நோந்நதாநி நிகிலாநி பதாநி காடம் மஜ்ஜந்தி; ததாபி த்வம் சீலேந நீசஜநாந் நீரந்த்ரம் ஆச்ரயஸி

திருத்தண்காவிலெம்பெருமானே! தேவரீருடைய பெருமைக்கடலின் திவலைகளிலே அளவுகடந்த நீசோச்சபாவத்தையுடைய ஸகலஸ்தானங்களும் மூழ்கிப்போகின்றன; (என்னும்படியாக) இவ்வளவு பெருமை பெற்றவரா யிருக்கச் செய்தேயும் தேவரீர் சீலகுணத்தினால் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறுகின்றீர்.

*** இப்ப்ரகரணமான ரக்ஷணத்திற்கு உபாயங்களான குணங்களில் ஸௌசீல்ய குணத்திலே மிகவுமீடுபட்டுப் பேசுகிறார். சீலமென்பதும் ஸௌசீல்யமென்பதும் பர்யாயம். "மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷ:—சீலம்." என்றாயிற்று சீலகுண லக்ஷண பரிஷ்காரமிருப்பது. எம்பெருமானுடைய பெருமை அளவுகடந்ததென்பதை விலக்ஷணமாக ஸூசிக்கின்றது பூர்வார்த்தம். ப்ரஹ்மருத்ராதிகளென்ன, அஷ்டதிக்பாலகர்களென்ன, மற்றும் ஆதிகாரிக தேவவர்க்கங்களென்ன இவர்களினுடைய விபூதிகளெல்லாம் எம்பெருமானுடைய பெருமைக்கடலின் சில திவலைகளிலே ஒடுங்கிப் போகின்றனவென்கிறார். ஸ்தோத்ரரத்னத்தில் "தத்வேந யஸ்ய மஹிமார்ணவசீகராணுச் சக்யோ ந மாதுமபி சர்வ பிதாமஹாத்யை:" என்று ஆளவந்தாரருளிச் செய்ததை ஒருவாறு நினைப்பூட்டுமிது. ப்ரஹ்ம ருத்ர வருண யமாதிகளின் விபூதிகளிலே பரஸ்பரமுள்ள ஏற்றத் தாழ்வுகளைக் கருதி 'நிம்நோந்நதாநி' என்றார். மேம்பட்டவர்களென்று பேர்பெற்ற அனைவருடையவும் விபூதிகளனைத்தும் தேவரீருடைய மஹிமைகதேசத்திலே யொடுங்கும்படியாயிருக்கும்; அத்தகைய பெருமைவாய்ந்த தேவரீர் "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி" (தயாசதகே.) என்று ஒரு கோவையாக எடுத்தோதப்பட்டவர்களோடு புரையறக்கலந்து பரிமாறுவது சீலத்தினாலன்றோ என்றாயிற்று. ... (18)

काशीवृकान्धकशरासनबाणगङ्गासंभूतिनामकृतिसंवदनाद्युदन्तैः ।
स्वोक्त्यम्बरीषभयशापमुखैश्च शंभुं त्वन्निघ्नमीक्षितवतामिह कश्शरण्यः ॥ १९

ஸான பல ஸம்வாதங்கள் இதிஹாஸபுராண ப்ரஸித்தம். ஶ்லோகத்திலாவது, "ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே, ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே!" இத்யாதியாகத் தானே சொன்னது. அம்பரீஷவ்ருத்தாந்தமாவது, ஸ்ரீமந்நாராயணனுடைய அநுக்ரஹத்தை அதிமாத்ரமாகப் பெற்றிருந்த அம்பரீஷ சக்ரவர்த்தி பக்கலிலே அபசாரப்பட்ட துர்வாஸஸ்ஸை திருவாழியாழ்வானால் தொடரப்பட்டு த்ராஹி த்ராஹியென்று சிவன் காலிலே விழுந்தபோது அம்பரீஷனுக்கு அஞ்சி முனிவனுக்குக் கைகொடுக்கமாட்டாதொழிந்தகதை. இனி, ஶாபகதை ஸுப்ரஸித்தம். "பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணுமுண்டியான் சாபம்" என்று திருமங்கையாழ்வாரும் ப்ரஹ்மபாதகமென்று ஆளவந்தாருமருளிச்செய்தவை காண்க. ஆதிஸம்பத்தாலே ப்ரளயகாலத்தில் எம்பெருமான் திருவயிற்றிலுட்புகுந்து ரக்ஷை பெற்றது முதலானவை கொள்ளத்தகும்.

ஆக இத்தகைய கதைகளாலே [ஶம்போ:—ஶம்பு: ஸ்வவ்ருத்தீஷு தவ தாஸ:] ஶம்புவானவன் எம்பெருமானுக்கு அதீநமான ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளையுடையவனென்னுமிடத்தையறிவார்க்கு "கண்ணனல்லாலில்லை கண்டீர் சரணென்று அறுதியிடுவதில் தட்டுண்டோவென்று திருவுள்ளமாயிற்று. त्वदधिघ्न—त्वदधीन इत्यर्थः ॥ .... ... ... (19)

कासौ विभुः क्व वयमित्युपसत्तिभीतान् जन्तून्क्षणात्त्वदनुवृत्तिषु योग्ययन्ती ।
संप्राप्तसद्गुरुतनोः समये दयालोरात्मावधिर्भवति संस्कृतिरीक्षणं ते ॥ २०

க்வாஸௌ விபு: க்வ வயமித்யுபஸத்திபீதாந் ஜந்தூந் க்ஷணாத் த்வதநுவ்ருத்திஷு யோக்யயந்தீ
ஸம்ப்ராப்தஸத்குருதநோ: ஸமயே தயாலோராத்மாவதிர் பவதி ஸம்ஸ்க்ருதிரீக்ஷணம் தே. 20

| | |
|---|---|
| அஸௌ விபு: க்வ? வயம் க்வ? இதி உபஸத்திபீதாந் ஜந்தூந் க்ஷணாத் த்வதநுவ்ருத்திஷு யோக்யயந்தீ, ஸமயே ஸம்ப்ராப்தஸத்குருதநோ: தயாலோ: தே ஈக்ஷணம் ஸம்ஸ்க்ருதி: ஆத்மாவதி: பவதி | 'ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரன் எங்கே? நாம் எங்கே?' என்கிற கார்ப்பண்யத்தாலே அணுகுவதற்கு அஞ்சுகின்ற ப்ராணிகளை உன்னையநுவர்த்திப்பதில் ஒரு கொடிப்பொழுதில் யோக்யர்களாக்குகின்றதாய், ஸமயத்தில் ஆசார்ய வேஷத்தைப் பரிக்ரஹிக்கின்ற தயாளுவான உன்னுடையதான கடாக்ஷமாகிற ஸம்ஸ்காரமானது ஆத்மாவுள்ளவரையிலும் போகாததாயிருக்கின்றது. |

*** எம்பெருமான் விபவாவதாரங்கள் செய்து ரக்ஷிக்கும்பரிசு கீழே சொல்லிற்று; "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து" என்கிற பெரியாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே ஆசார்யரூபேணவும் அவதரித்து அநுக்ரஹித்தருளுகிறபடி சொல்லுகிறது இந்த ச்லோகத்தில். "அம்மானாழிப் பிரான் அவனெவ்விடத்தான் யானார்" [திருவாய்மொழி 5-1-7] என்று அத்தலையில் ஏற்றத்தையும் இத்தலையில் தாழ்வையும் சிந்தித்து அணுகுவதற்கு அஞ்சுவார் பலருண்டே; அன்னவர்களுக்கு அவனுடைய ஸௌசீல்ய ஸௌலப்யாதிகுண விசேஷங்களை யெடுத்துக்காட்டி 'நாம் பகவதநுவ்ருத்திக்கு அர்ஹராகத் தட்டில்லை' என்று உறுதிகொள்ளுவதற்குப் பாங்காக உபதேசங்கள் செய்தருள ஆசார்ய ரூபத்தை ஏற்றுக்கொண்டு, நிக்ரஹாநுக்ரஹ ஸாதாரணமான தன் ஸமயத்தை விட்டிட்டு அநுக்ரஹைக தீக்ஷையுடன் கடாக்ஷித்தருளுமது யாவதாத்மபாவி நன்மையைப் பயக்குமதாகத் நிலைக்கட்டுகின்றது என்றதாயிற்று. இந்த ச்லோகத்தின் நான்காவது

பாதத்தில் "ஸம்ஸ்க்ருதயே: க்ஷணம் தே" "பரிஷ்க்ருதயே: க்ஷணத் தே" "ஸம்ஸ்க்ருதி ரீக்ஷணம்தே" என்று மூவகையான பாடபேதங்கள் காணப்படுகின்றன. 'யோக்யயுக்தி" என்கிற ஸ்த்ரீ லிங்கவிசேஷணபதத்திற்கு ஸ்த்ரீலிங்கவிசேஷ்யபதமொன்று அவச்யாபேக்ஷிதம். "ஸம்ஸ்க்ருதி ரீக்ஷணம் தே" என்கிற பாடமே பொருத்தமாகக் காண்கிறது. ஈக்ஷணசப்தம் நித்யநபும்ஸகமாகையாலே 'ஈக்ஷணம் ஸம்ஸ்க்ருதி:' என்று நிற்கிறது. கடாக்ஷண ரூபமான ஸம்ஸ்காரணமென்றபடி. "ஸம்ஸ்க்ருதயே:" என்றோ "பரிஷ்க்ருதயே:" என்றோ ஸமஸ்தபாடமிருப்பதற்கு ஔசித்யம் காண்கின்றிலோம். ஸமீசீநபாடத்தைக் கண்டுகொள்வது. (20)

योग्यं यमैश्च नियमैश्च विधाय चित्तं सन्तो जितासनतया स्ववशासुवर्गाः ।
प्रत्याहृतेन्द्रियगणाः स्थिरधारणास्त्वां ध्यात्वा समाधियुगलेन विलोकयन्ति ॥ २१

யோக்யம் யமைச் ச நியமைச் ச விதாய சித்தம் ஸந்தோ ஜிதாஸநதயா ஸ்வவசாஸுவர்கா:
ப்ரத்யாஹ்ருதேந்த்ரியகணா: ஸ்திரதாரணாஸ் த்வாம் த்யாத்வா ஸமாதியுகலேந விலோகயந்தி. 21

| | |
|---|---|
| ஸந்த: யமைச் ச நியமைச் ச சித்தம் யோக்யம் விதாய ஜிதஆஸநதயா ஸ்வவசஅஸுவர்கா: ப்ரத்யாஹ்ருத இந்த்ரியகணா: ஸ்திரதாரணா: த்வாம் த்யாத்வா ஸமாதியுகலேந (த்வாம்) விலோகயந்தி. | (எம்பெருமானே!) பெரியோர்கள் யமங்களாலும் நியமங்களாலும் அந்த:கரணத்தை ஸமாதியோக்யமாகச் செய்துகொண்டு ஸ்வஸ்திகம் முதலான ஆஸன பேதங்களை வசப்படுத்தியிருக்கும் தன்மையினாலே ப்ராணாதி வாயுவர்க்கங்களை ஸ்வாதீநமாகக் கொண்டவர்களாய் இந்த்ரியங்களை அடக்கியாள்பவர்களாய் ஸ்திரமான தாரணையை யுடையவர்களாயிருந்து கொண்டு உன்னைச் சிந்தை செய்து ஸாலம்பநம் நிராலம்பநம் என்று இரு வகைப்பட்ட ஸமாதியினாலும் உன்னைக் காண்கிறார்கள். |

* * * இதுமுதல் மூன்று சுலோகங்களினால் சிலர் யோகாநுஷ்டானத்தாலே எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கும்படியைப் பேசுகிறார். திருக்குறுந்தாண்டகத்தில் (18) "இளைப்பினை யியக்கம் நீக்கி யிருந்துமுன்னிமையைக்கூட்டி, அளப்பிலைம்புலனடக்கி அன்பவர்கண்ணேவைத்து, துளக்கமில் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டாங்கே, விளக்கினைவிதியிற்காண்பார் மெய்ம்மையே காண்கிற்பாரே." என்கிற பாசுரத்திற்கு ப்ரதிச்சந்தம் போலிருக்குமித்த சுலோகம். ஸமாதி சாஸ்த்ரங்களில் பத்துவிதமான யமங்களும், பத்துவிதமான நியமங்களும் கூறப்பட்டுள்ளன. அஹிம்ஸை, அஸ்தேயம், ஸத்யம் முதலான பத்தும் யமங்களெனப்படும். தபஸ் ஸந்தோஷம் ஆஸ்திக்யம் முதலான பத்தும் நியமங்களெனப்படும். இவை அந்த:கரணத்துக்கு சுத்தியை யுண்டாக்கும் முகத்தால் ஸமாதி யோக்யதாபாதகங்களாம். இதற்குமேல் ஸ்வஸ்திகம், கோமுகம், பத்மம், வீரம், ஸிம்ஹாஸநம் முதலான ஆஸன வகைகளை அவலீலையாகக் காட்டவல்ல ஸாமர்த்தியமிருந்தால் ப்ராணாபாநாதி பஞ்சவ்ருத்திகள் வசப்பட்டனவாம். ஸமாதிஸாதனத்திற்கு இதுவும் முக்கியமானதொன்றாம். ஐம்புலனைத்தடக்குவது இந்த்ரியஜயமாவது. [ஸ்திரதாரணா:] இது பஹுவ்ரீஹி ஸமாஸம். பரமாத்மாவினிடத்திலே ஸ்வாத்மாவை ஸ்திரமாக வைத்திருப்பவர்களென்றபடி. ஆக, யமநியமாஸந ப்ராணாயாம ப்ரத்யாஹாரதாரணைகளைச் சொல்லியாயிற்று. இவற்றால் நிஷ்பந்நமாகவேண்டியது ஸமாதி. அது ஸாலம்பநமென்றும் நிராலம்பநமென்றும் இருவகைப்படும். திவ்யமங்கள விக்ரஹத்தைக் குறிக்கொள்வது ஸாலம்பநம். தத்வ்யதிரிக்தம் நிராலம்பநம். ஸபீஜஸமாதியென்றும் நிர்பீஜஸமாதியென்றும் சொல்லுவதுண்டு. அதிகாரிபேதங்களையிட்டு இந்த பேதம் கொள்ளக்கடவது. மேல் இருபத்திரண்டாம் சுலோகத்தில் "ஸாலம்பநேந பரிசித்ய ந யாந்தி த்ருப்திம்." என்றருளிச் செய்கையாலே ஸாலம்பந ஸமாதியே ஸ்வரூபாநுரூபமென்று தெளியக்கடவது. (21)

मानातिलङ्घिसुखबोधमहाम्बुराशौ मग्नास्त्रिसीमरहिते भवतस्स्वरूपे ।
तापत्रयेण विहतिं न भजन्ति (भूयः) सन्तः संसारघर्मजनितेन समाधिमन्तः ॥ २३

மாநாதிலங்கிஸுகபோதமஹாம்புராசௌ மக்நாஸ் த்ரிஸீமரஹிதே பவதஸ் ஸ்வரூபே
தாபத்ரயேண விஹதிம் ந பஜந்தி (பூய:) ஸந்த: ஸம்ஸாரகர்மஜநிதேந ஸமாதிமந்த: 23

த்ரிஸீம ரஹிதே பவத: ஸ்வரூபே மாநாதி லங்கி ஸுகபோத மஹாம்புராசௌ மக்நா: ஸமாதிமந்த: பூய: ஸம்ஸார கர்மஜநிதேந தாபத்ரயேண விஹதிம் ந பஜந்தி } (எம்பெருமானே!) காலதேசவஸ்து பரிச்சேதங்களாகிற த்ரிவிதபரிச்சேதமும் அற்றதான உன்னுடைய ஸ்வரூபமாகிற அப்ரமேயாநந்த ஸாகரத்திலே மூழ்கிநின்ற யோகிகள் மீண்டும் ஸம்ஸார வெக்காயத்தினுண்டாகும் தாபத்ரயத்தினாலே துயரத்தையடையமாட்டார்கள்.

* * * கேவலஸ்வரூபத்யானத்திலே ஊன்றினவர்களுக்கு [அதாவது, நிராலம்பந ஸமாதிநிஷ்டர்களுக்கு] புநரபி ஸாம்ஸாரிகக்லேசங்களினால் உபஹதியில்லையென்னுமதனை போக்கி முக்திப் பேரின்பவெள்ளத்திலாழங்காற்படுகை சொல்லப்போகாதென்கிற திருவுள்ளங்கொண்டு இந்தச்லோகமருளிச்செய்கிறார். ஸம்ஸாரநிவ்ருத்தியைச் சொன்னது மோக்ஷப்ராப்தியைச் சொன்னபடியுமாம் என்பாருமுண்டு. த்ரிஸீமாஹிதே—தேசபரிச்சேதமும் காலபரிச்சேதமும் வஸ்துபரிச்சேதமுமற்றதென்றபடி. ஸர்வதேசவ்யாபியாய், ஸர்வகாலவர்த்தியாய், ஸர்வவஸ்த்வாத்மகமாயிருப்பதென்றபடி. ... ... (23)

धीसंस्कृतान्विदधतामिह कर्मभेदान् शुद्धं जिते मनसि चिन्तयतां स्वमेकम् ।
त्वत्कर्मसक्तमनसामपि चापरेषां सूते फलान्यभिमतानि भवान्प्रसन्नः ॥ २४

தீஸம்ஸ்க்ருதாந் விதததாமிஹ கர்மபேதாந் சுத்தம் ஜிதே மநஸி சிந்தயதாம் ஸ்வமேகம்
த்வத்கர்மஸக்தமநஸாமபி சாபரேஷாம் ஸூதே ஃபலாந்யபிமதாநி பவாந் ப்ரஸந்ந:. 24

தீ ஸம்ஸ்க்ருதாந் கர்ம பேதாந் இஹ விததாம் ஜிதே மநஸி சுத்தம் ஸ்வம் ஏகம் சிந்தயதாம் த்வத்கர்மஸக்தமநஸாம் அபரேஷாஞ்ச பவாந் ப்ரஸந்ந: அபிமதாநி பலாநி ஸூதே. } (எம்பெருமானே!) ஜ்ஞானயோக ஹேதுக்களான கர்மயோக வகைகளை இங்குச் செய்பவர்களுக்கும், வெற்றியுற்றமனத்தில் பரமபவித்ரனான தன்னையே சிந்திப்பவர்களுக்கும், அநுஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்களுக்கும் ஆஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்களுக்கும் நீ ப்ரஸன்னனாகி அபிமதபலன்களை யளிக்கின்றாய்.

* * * இதில் நால்வகைப்பட்ட அதிகாரிகளைச் சொல்லி அவ்வோ அதிகாரிகளுக்கு அபிமதமான பலன்களை எம்பெருமான்தானே கொடுத்தருளும்படியை யருளிச் செய்கிறார். நால்வகையதிகாரிகள் யாவரென்னில், அடைவே மூன்று பாதங்களிலும் சொல்லப்பட்டவர்கள். கீதார்த்தஸங்க்ரஹத்தில் "त्रयाणामपि योगानां त्रिभिरन्योन्यसंगमः" என்று ஆளவந்தாரருளிச்செய்திருக்கையாலே கர்மஜ்ஞானபக்தியோகங்கள் ஒன்றைவிட்டொன்று நில்லாது. ஆகவே முதல்பாதம் கர்மஜ்ஞான பக்தியோக நிஷ்டர்களைச் சொன்னதாகிறது. இரண்டாவது பாதத்தில் "சுத்தம் ஸ்வமேகம் சிந்தயதாம்" என்று கைவல்யநிஷ்டர்களைச் சொல்லுகிறது. "ஸ்வாத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா" என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்திப்படியே கைவல்யாநுபவமென்கிறவொரு சிறு வீடான மோக்ஷத்தை விரும்பி அசித்வியுக்தமாய் அத ஏவ பரிசுத்தமான ஸ்வாத்மாவை உபாஸிப்பவர்களென்றபடி. [த்வத்கர்மஸக்த மநஸாம்] த்வத்கைங்கர்யைக ஸக்தாநாம் என்றபடி. அதாவது இளைய பெருமாளைப்போலே அத்தாணிச்சேவகத்தையே நித்யநைமித்திகாதி ஸகலகர்மாநுஷ்டானமுமாகக் கொண்டிருப்பவர்க

என்ற அநாஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்களைச் சொல்லுகிறது. "मत्कर्म कुर्वतां पुंसां कर्मलोपो भवेद्यदि। तेषां तत्कर्म कुर्वन्ति तिस्रः कोट्यो महर्षयः॥ என்று எம்பெருமான்தானே சோதிவாய் திறந்தருளிச்செய்த உத்தமாதிகாரிகளாயிற்றிவர்கள். இவர்களை அநாஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்களென்று வ்யபதேசிப்பர்கள். இதற்குமேல அபரேஷாம் என்றது ஆஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்களைச் சொன்னபடி. "क्रियमाणं न कस्मैचिद्यदर्थाय प्रकल्पते। अक्रियावदनर्थाय तत्तु कर्म समाचरेत्॥" என்கிறபடியே செய்தவளவுக்கு ஒரு பலனின்றிக்கே யிருப்பதாய், செய்யாதொழியில் ப்ரத்யவாயாவஹமாயிருப்பதான நித்யநைமித்திக கர்மாநுஷ்டாதாக்களைச் சொன்னபடி. இந்நால்வகையதிகாரிகளுக்கும் அபிமதமான பலன்களை யளிப்பவன் எம்பெருமானே என்றதாயிற்று. அநாஜ்ஞாகைங்கர்ய நிஷ்டர்கள் ஒரு பலனையும் கோராதவர்களெனினும் பகவன்முகோல்லாஸமாகிற பலனுவது இருந்தே தீரும். ... ... (24)

उद्बाहुभावमपहाय यथैव खर्वः प्रांशुं फलं समभियाचति योगिचिन्त्य!।
एवं सुदुष्करमुपायगणं विहाय स्थाने निवेशयति तस्य विचक्षणस्त्वाम्॥ २५

உத்பாஹுபாவமபஹாய யதைவ கர்வ: ப்ராம்சும் பலம் ஸமபியாசதி யோகிசிந்த்ய!
ஏவம் ஸுதுஷ்கரமுபாயகணம் விஹாய ஸ்தாநே நிவேசயதி தஸ்ய விசக்ஷணஸ் த்வாம். 25

ஹே யோகிசிந்த்ய! கர்வ: பலார்த்தம் உத்பாஹுபாவம் அபஹாய யதைவ ப்ராம்சும் அபியாசதி, ஏவம் விசக்ஷண: ஸுதுஷ்கரம் உபாயகணம் விஹாய தஸ்ய ஸ்தாநே த்வாம் நிவேசயதி. } யோகிகளால் சிந்திக்கத்தக்க பெருமானே! குள்ளனானவன் (உயரவிருக்கிற) பழத்தைப் பெறுவதற்காகத் தான் கைதூக்குவதைவிட்டு உன்னத புருஷனை நோக்கி வேண்டுவது வேண்டுவது போல, ஸமர்த்தனான ப்ரபந்நாதிகாரியானவன் மிகவும் செயற்கரிதான உபாயங்களை விட்டு அந்த உபாயஸ்தானத்திலே உன்னை வைக்கின்றான்.

*** காளிதாஸமஹாகவி ரகுவம்சத்தில் * प्रांशुलभ्ये फले लोभादुद्बाहुरिव वामनः * என்று தமக்கொரு த்ருஷ்டாந்தமிட்டார். உயரமான மரத்தில் பழுத்துத் தொங்குகிற பழத்தைப் பறிக்க நினைப்பவன் உந்நதபுருஷனாயிருந்தால் எளிதாகப்பறித்துண்கிறான்; வாமனனாயிருந்தால் எட்டியெட்டிப் பறிக்கப்பார்ப்பன்; கையைத் தூக்குவன்; பழமோ கையிலெட்டாது; பார்ப்பவர்கள் பரிஹஸிக்க நிற்பன்—என்பது இதன்பொருள். இதையறிந்த மற்றொரு வாமனன் பழத்தை விரும்பித் தான் கைதூக்கிப் பரிஹாஸ்யனாகாமே உந்நத புருஷனான ஒருவனை நோக்கி 'நீர் பறித்துத்தாரும்' என்று ப்ரார்த்தித்தானாகில் அப்பழத்தை எளிதில் பெற்று உண்கிறான். அதுபோல் சில அசக்தர்கள் தங்களுக்கு அசக்யங்களான கர்மஜ்ஞான பக்தியோகங்களிலே கைவைத்துப் பலன் பெறமாட்டாதே பரிஹாஸ்யராய் நிற்க சில ஸமர்த்தர்கள் அந்த கர்மஜ்ஞான பக்திகளின் ஸ்தானத்திலே எம்பெருமானையே நிறுத்தி 'நீயே பேறுதந்தருள்வாய்' என்றிரந்து, எளிதாகப் பேறு பெறுகிறார்கள்; இதுதான் சரணாகதியின் மருமம் என்று தெரிவித்தபடி. ஸ்ரீரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்தில் * [illegible] * என்றருளிச்செய்ததுதான் இங்கு விவக்ஷிதமானபடி. சாகுந்தல நாடகத்தில்—துஷ்யந்த சக்ரவர்த்தி முன்னம் தன்னிடம் வந்துசேர்ந்த சகுந்தலையை சாபோபஹதியாலே திரஸ்கரித்துப் போகவிட்டுப் பிறகு மோதிரங்கண்டு உத்புத்தனாய்

மஹத்தான அநுதாபமடைந்து அதற்குப் போக்குவீடாக "येनयेन वियुज्यन्ते प्रजाः स्निग्धेन बन्धुना । स स पापादृते तासां दुष्यन्त इति घुष्यताम्" என்று டங்குரகோஷணம் பண்ணும்படி கட்டளையிட்டதாகக் காண்கிறோம். இது எம்பெருமானுடைய நீர்மையை அநுகரிக்கிறபடியத்தனை. எம்பெருமான் எந்த ஸ்தானத்திலும் நிற்பதற்குப் புஷ்கலஸக்தியுக்தனென்பது பரமார்த்தம். .... .... .... (25)

नित्यालसार्हमभयं निरपेक्षमन्यैर्विश्वाधिकारमखिलाभिमतप्रसूतिम् ।
शिक्षाविशेषसुलभं व्यवसायसिद्धाः सत्कुर्वते त्वयि मुकुन्द ! षडङ्गयोगम् ॥ २६

நித்யாலஸார்ஹமபயம் நிரபேக்ஷமந்யை: விச்வாதிகாரமகிலாபிமதப்ரஸூதிம்,
ஶிக்ஷாவிசேஷஸுலபம் வ்யவஸாயஸித்தா: ஸத்குர்வதே த்வயி முகுந்த! ஷடங்கயோகம். 26

| | |
|---|---|
| ஹேமுகுந்த! நித்யாலஸார்ஹம் அபயம் அந்யை: நிரபேக்ஷம் விச்வாதிகாரம் அகிலாபிமதப்ரஸூதிம் ஶிக்ஷாவிசேஷஸுலபம் ஷடங்கயோகம் வ்யவஸாயஸித்தா: த்வயி ஸத்குர்வதே. | மோக்ஷமளிக்கும் பெருமானே! ஸர்வப்ரகாரத்தாலும் அசக்தர்களுக்கே உரியதாய் நிர்பயமாய் இதர நிரபேக்ஷமாய் ஸர்வாதிகாரமாய் ஸர்வாபீஷ்டப்ரதமாய் ஆசார்யோபதேசஸுலபமான ஷடங்கயோகத்தைத் திடமின அத்யவஸாயமுள்ளவர்கள் உன் பக்கலிலே ஸத்காரரூபமாக ப்ரயோகிக்கின்றார்கள். |

* * * ஆபத்தியின் ஸ்வரூபத்தையும் அதன் பெருமையையும் விளக்குவது இந்த சுலோகம். சுலோகம் தொடங்கும்போதே (நித்யாலஸார்ஹம்) என்றருளிச் செய்தது "காம்பறத் தலைசிரைத்து உன் கடைத்தலையிருந்துவாழும் சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே" என்கிற திருமாலைப்பாசுரம் ஸ்வாமியின் திருவுள்ளத்திலோடுகின்றதென்பதைக் காட்டித்தரும். சோம்பலுள்ளவனை அலஸ: என்கிறது. கெடும் சோம்பரென்றும் வாழும் சோம்பரென்றும் சோம்பர் இருவகைப்படுவர். கர்மயோகாதிகளை நாஸ்திக்யத்தாலே விடுமவர்கள் கெடும்சோம்பர். ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்தாலே [நல்லதெளிவோடே] விடுமவர்கள்—அவன்கையையே எதிர்பார்த்திருக்குமவர்கள் வாழுஞ்சோம்பர். அன்னவர்களேயாயிற்று இங்கு நித்யாலஸபதவிவக்ஷிதர்கள். இந்தச்லோகத்திற்கு வ்யவஸாயஸித்தா: என்பது உயிர்நிலையாகும். "வ்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம் அமத்தில் போஜனம்போலே." என்கிற பூர்வாசார்யஸூக்தியையடியொற்றி யருளிச்செய்தபடி, அபயம் என்றது நிர்பயமென்கை. சேதநஸாத்யமாயிருந்தால் நடுவே அபாயங்கள் புகுருகைக்கு அவகாசமுண்டு; இங்கு அதற்கு ஆஸக்தியில்லையே. [அந்யை: நிரபேக்ஷம்] ஆபத்தி வித்யைக்கு அஸாதாரணமான வேஷமாகாரம் இதரநிரபேக்ஷோபாயத்வம் என்னுமிடத்தை ந்யாஸதிலகத்தில் "ஹேத்வந்தரேஷ்வநபேக்ஷிதயோ:" என்கிற சுலோகத்தில் "வேஷோந்யஹேதவ: உபாயதயா நநு ந்யவேக்ஷ்யா" என்றருளிச் செய்திருப்பது காண்க. *ஸ்வோக்த உபவஸித்ரே:* என்கிறபடியே ஸஹாயாந்தரஸஹாயமான ஸர்வஶக்தியோடே ஸர்வஜ்ஞத்வத்தையுடையனை சர்வாபேக்ஷித்திருக்கையொழிய "உன்னையல்லால் யாவராலுமொன்றுங் குறைவேண்டேன்" என்கிறபடியே வேறொன்றையும் அபேக்ஷித்திராதென்கை. [விச்வாதிகாரம்] ந்யாஸதிலகத்தில் * ஸர்வாதேசாபேக்ஷணைத் தகுப்ருதாம ஸத்யாதிவத் வ்யாப்தீ * என்றருளிச் செய்தார். ஸத்யஞ்சொல்லுவதென்பது எப்படி ஸர்வாதிகாரமோ அப்படியேயாயிற்றிதுவும். [ஶிக்ஷாவிசேஷஸுலபம்] ஸதாசார்ய ஸேவையில் பழுத்தவர்களுக்

கொழிய மற்றையோர்க்கு அரிது என்கை. [ஷடங்கயோகம்] இதைப்பற்றி அடுத்த ச்லோகத்தில் ஸ்வாமி தாமே விவரித்தருளுகிறாராகையாலே அங்கே விளங்கக் காண்க. (26)

त्वत्प्रातिकूल्यविमुखाः स्फुरदानुकूल्याः कृत्वा पुनः कृपणतां विगतातिशङ्काः ।
स्वामिन्भव स्वयमुपाय इतीरयन्तस्त्वय्यर्पयन्ति निजभारमपारशक्तौ ॥ २७

த்வத்ப்ராதிகூல்யவிமுகா: ஸ்புரதாநுகூல்யா: க்ருத்வா புந: க்ருபணதாம் விகதாதிஶங்கா:,
ஸ்வாமிந்! பவ ஸ்வயமுபாய இதீரயந்த: த்வய்யர்ப்பயந்தி நிஜபாரமபாரஶக்தௌ. 27

ஹே ஸ்வாமிந்! த்வத்ப்ராதிகூல்ய விமுகா: ஸ்புரதாநுகூல்யா: க்ருபணதாம் க்ருத்வா விகதஅதிஶங்கா: 'ஸ்வயம் உபாயோ பவ' இதி ஈரயந்த: அபாரஶக்தௌ த்வயி நிஜபாரம் அர்ப்பயந்தி.

எம்பெருமானே! ப்ராதிகூல்யவர்ஜநமும் ஆநுகூல்யஸங்கல்பமுமுடையவர்களாய் ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டு அதிசங்கை தவிர்ந்து விச்வாஸயுக்தர்களாய் 'நீயே உபாயமாகவேணும்' என்று சொல்லாநிற்பவர்களாய் அளவுகடந்த சக்தியையுடைய உன்னிடத்திலே (பரமைகாந்திகள்) தங்கள் பாரத்தை அர்ப்பணம் செய்கிறார்கள்.

* * * கீழ்ச்லோகத்தில் ஷடங்கயோகமென்றதை விவரிக்கிறது. பகவச்சாஸ்த்ரங்களிலே "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம், ரக்ஷிஷ்யதீதி விச்வாஸோ கோப்த்ருத்வவரணம் ததா, ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே ஷட்விதா ஶரணாகதி:" என்று ஷடங்கஸம்பத்தி சொல்லப்பட்டுள்ளது. அங்கியையும் அங்கங்களிலே ஒன்றாகச் சேர்த்து உபசாரேண ஷடங்கமென்கிறதென்றும், ஆத்மநிக்ஷேபமென்பதுதான் அங்கியென்றும் அஃதொழிந்த மற்றையைந்தும் அங்கமென்றும் நூற்கொள்கை. ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்தில் பரிகரவிபாகாதிகாரத்தில்—"இவ்வித்யைக்கு பரிகரமாவது ஆநுகூல்யஸங்கல்பமும் ப்ராதிகூல்யவர்ஜநமும் கார்ப்பண்யமும் மஹாவிச்வாஸமும் கோப்த்ருத்வவரணமும். இவ்விடத்திலே * ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:.........ஷட்விதா ஶரணாகதி: * இத்யாதிகளில் சொல்லுகிற ஷாட்வித்யமும் அஷ்டாங்கயோகமென்னுமாபோலே அங்காங்கி ஸமுச்சயத்தாலே யாகக்கடவதென்னுமிடமும், இவற்றில் இன்னதொன்றுமே அங்கி, இதரங்கள் அங்கங்களென்னுமிடமும் * நிக்ஷேபாபரபர்யாயோ ந்யாஸ: பஞ்சாங்கஸம்யுத:, ஸம்ந்யாஸஸ்த்யாக இத்யுக்த: ஶரணாகதிரித்யபி * என்கிற ச்லோகத்தாலே ந்யாயநிரபேக்ஷமாக ஸித்தம்." என்று விசதீகரிக்கப்பட்டுமுள்ளது. ந்யாஸதசகத்திலும் "நியதபஞ்சாங்கம் மத்ரக்ஷண பரார்ப்பணம்" என்றருளிச்செய்தார். ஆகவே இங்கு மூன்று பாதங்களினால் ஐவகைப்பட்ட அங்கங்களைச் சொல்லி நாலாம்பாதத்தினாலே அங்கியைச் சொல்லித்தலைக்கட்டுகிறார். [க்ருபணதாம் க்ருத்வா] என்றது—ஆகிஞ்சந்யாநுஸந்தானம் பண்ணி யென்றபடி. பஞ்சாங்கங்களில் இதுவுமொன்றிறே. விகதாதிஶங்கா: என்பதனால் ரக்ஷிஷ்யதீதி விச்வாஸமுடைமை சொன்னபடி. மூன்றாவது பாதம்—கோப்த்ருத்வவரணப்ரதிபாதகம். [அபாரஶக்தௌ] ஶரணாகதிதான் ஸர்வாதிகாரமாகையாலே ஸ்வரக்ஷாபரத்தை உலகமடங்கலும் தன் பக்கலில் ஸமர்ப்பித்தாலும் ஏற்றுக்கொண்டு காரியம் செய்யப் பாங்கான சக்தியுடையவனென்கை. .... (27)

अ(ध्वा)र्थान्तरेषु विमुखानधिकारहानेः श्रद्धा(धिकां)धनांस्त्वदनुभूतिविलम्बभीतान् ।
दीपप्रकाश ! लभसे सुचिरात्कृतीव न्यस्तात्मनस्तव पदे निभृतान्प्रपन्नान् ॥ २८

அர்த்தாந்தரேஷு விமுகாந் அதிகாரஹாநே: ச்ரத்தாதிகாந் த்வதநுபூதிவிலம்பபீதாந்,
தீபப்ரகாஶ! லபஸே ஸுசிராத் க்ருதீவ ந்யஸ்தாத்மந: தவ பதே நிப்ருதாந் ப்ரபந்நாந். 28

ஹே நிப்ரகாச! அர்த்தாந்தரேஷு அதிகாரஹாநே: விமுகாந் ச்ரத்தா அதிகாந் த்வதநுபூதிவிலம்பபீதாந் நிப்ருதாந் தவ பதே ந்யஸ்தஆத்மந: ப்ரபந்நாந் த்வம் க்ருதீஇவ ஸுசிராத் லபஸே

விளக்கொளியெம்பெருமானே! கர்மஜ்ஞாநபக்திகளாகிற உபாயாந்தரங்கள் ஸ்வாதிகாரவிருத்தங்களென்கிற காரணத்தினால் அவற்றில் அந்வயியாதவர்களும், மஹா விச்வாஸயுக்தர்களும், உன்னையநுபவிப்பதில் காலதாமதம் பொருதவர்களும், பேற்றிலேயே கண்வைத்தவர்களும், உன் திருவடிகளில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்தவர்களுமான ப்ரபந்நர்களை க்ருதக்ருத்யன் போல நீ நெடுநாள் இழந்திருந்து பெறுகின்றாய்.

* * * கீழ்ச்சொன்ன ப்ரபந்நாதிகாரிகளிடத்திலே எம்பெருமானுடைய பரிமாற்றமிருக்கும்படி சொல்லுகிறது இதில். "ப்ரபந்நா: த்வாம் லபந்தே" என்றருளிச் செய்யவேண்டியிருக்க அங்ஙனமருளிச் செய்யாது "ப்ரபந்நாந் த்வம் லபஸே" என்றருளிச் செய்தது வடிக்கட்டின ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸௌரபம். கீதையில் * வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று இழவு தோற்றப்பேசினவனுகையாலே அதைத் திருவுள்ளம்பற்றி உன்னிழவுதீர்ந்து பேறுபெற்றாயிறே! என்கிறார். [அதிகாரஹாநே: அர்த்தாந்தரேஷு விமுகாந்] அகிஞ்சநத்வம் அநந்யகதித்வம் அநந்யபோக்யத்வமாகிற அதிகாரபூர்த்திக்குக் கொத்தையாயிறே உபாயாந்தர உபேயாந்தரங்களில் நசையுண்டாமாகில்; ஸ்வாதிகார பூர்த்தியை நன்குணர்ந்து அதற்கொரு ஹாநி வாராமைக்காக உபாயோபேயங்களில் திடமான நிஷ்கர்ஷமுடையவர்களையேயாயிற்று எம்பெருமான் உத்தமாதிகாரிகளாக வுகப்பது. * ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே, ஐச்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா * என்றிருக்குமவர்களைச் சொல்லுகிறது. [ச்ரத்தாதிகாந்] மஹாவிச்வாஸத்தையாயிற்று ச்ரத்தையென்கிறது. அஃதில்லையாகில் மற்று எவையிருந்தாலும் பயனில்லையே. பேற்றிலே ஸம்சயமின்றிக்கே மார்விலே கைவைத்துறங்குமவர்களென்கை. பேறுதப்பாதென்று துணிந்திருக்கையை இதனுற்சொல்லி, பேற்றுக்குத்வரிக்கையை அடுத்த விசேஷணத்தினுற் சொல்லுகிறார் [த்வதநுபூதி விலம்பபீதாந்] என்று. "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ?" "எனை நாள்வந்து கூடுவன் யான்" என்று பதறுமவர்கள். கீழ் "கர்மஸ்வநாதி நிதநேஷு" (14) என்கிற ச்லோகத்திலே "ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!" என்று அவன் பதறுவதாகச் சொல்லிவைத்து, இங்கு 'த்வதநுபூதிவிலம்பபீதாந்' என்று அவர்கள் பதறுவதாகச் சொல்லுவதெங்ஙனேயென்று சங்கிக்கவேண்டா; உண்மையில் பேறு பெறுபவனும் த்வரிப்பவனும் அவனே; இத்தலையில் சைதந்யமென்றொன்றிருக்கையாலே இது இவளைப்பேறுபெறத் தூண்டுவதோடு த்வரிக்கவும் செய்யாநின்றதாயிற்று. ஆனாலும் இதுவன்று கார்யகரம்; அவனுடைய ஸஹ்ருதயமும் த்வரையுமேயாயிற்று கார்யகரம்; அது மூன்றுவது பாதத்தில் விளங்குகின்றது. [ஸுசிராத் க்ருதீஇவ லபஸே] என்கிற பதங்கள் அருமைபெருமை வாய்ந்தவை. ஸுசிராத் என்றது இனிமேல் நெடுங்காலம் கழித்து என்றபடியன்று; கீழ் நெடுங்காலம் தவங்கிடந்து பெருதே இழவோடே கிடந்து இப்போதாகப் பெறுகிறாய் என்றபடி. [க்ருதீஇவ] 'இப்போதே நான் க்ருதக்ருத்யனானேன்' என்று எம்பெருமான் சொல்லிக்கொள்ளுகிறான்போலும். க்ருதக்ருத்யத்வம் சேதநன் பக்கலிலே யன்றிக்கே தன்பக்கலிலேயானபடி; "க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோதஹ." என்றுனிறே மஹர்ஷி.

"அத்வாந்தரேஷு" என்றும் "ச்ரத்தாதநாந்" என்றும் பாடபேதமுண்டு. (28)

मन्त्रैरनुश्रवमुखेष्वधिगम्यमानैः स्वाधिक्रियासमुचितैर्यदि वाऽन्यवाक्यैः ।
नाथ ! त्वदीयचरणौ शरणं गतानां नैवायुतायुतकलाऽप्यपरैस्त्वाप्या ॥ २९

மந்த்ரைரநுச்ரவமுகேஷ்வபிகம்யமானை: ஸ்வாமித்ரிபாஸமுசிதைர் யதிவாऽந்யவாச்யை:
நாத! த்வதீயசரணௌ சரணம் கதாநாம் நைவாயுதாயுதகலாப்யபரைரவாப்யா. 29

நாத! அநுச்ரவமுகேஷு அபிகம்யமானை: மந்த்ரை: யதிவா ஸ்வாமித்ரிபா ஸமுசிதை: அந்யவாக்யை: த்வதீய சரணௌ சரணம் கதாநாம் அயுதாயுத கலாபி அபரை: நைவ அவாப்யா. — எம்பெருமானே! வேதம் முதலியவற்றில் ஓதப்படுகிற மந்த்ரங்களினாலோ, ஸ்வாமிகளாகும்படியான ஆழ்வாராசாரியர்களின் பாசுரங்களினாலோ தேவரீருடைய திருவடிகளை சரணம் புகுந்தவர்களுக்குள்ள பெருமையில் கோடியில் ஒரு பாகமும் இதரர்களால் [உபாஸகர்களால்] அடையமுடியாதது.

*** சரணாகதி நிஷ்டர்களே ச்ரேஷ்டாதிகாரிகளென்கிறது இதில். வேதோபப்ருஹ்மண மந்த்ரரத்னமென்கிற த்வய மந்த்ரத்தைக் கொண்டோ, "பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந், ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச, ஸர்வதர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்ச ஸாக்ஷராந், லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேऽவ்ரஜம் விபோ!" இத்யாதி புராணச்லோகங்களைக் கொண்டோ, "புகலொன்றில்லா அடியேனுன் அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" "அகிஞ்சனோऽநந்யகதிச் சரண்ய! த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே" இத்யாதிகளான ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டோ அடைக்கலம் புகுவாரான சரணாகதர்களின் பெருமையில் ஏகதேசமும் மற்றைய அதிகாரிகளுக்கு அரிதேயென்றாயிற்று. ... ... ... ... (29)

दत्ताः प्रजा जनकवत्तव देशिकेन्द्रैः पत्याऽभिनन्द्य भवता परिणीयमानाः ।
मध्ये सतां महितभोगविशेषसिद्ध्यै माङ्गल्यसूत्रमिव बिभ्रति किङ्करत्वम् ॥ ३०

தத்தா: ப்ரஜா ஜநகவத் தவ தேசிகேந்த்ரை: பத்யாऽபிநந்த்ய பவதா பரிணீயமானா:,
மத்யே ஸதாம் மஹிதபோகவிசேஷஸித்த்யை மாங்கல்யஸூத்ரமிவ பிப்ரதி கிங்கரத்வம். 30

ஜநகவத் தேசிகேந்த்ரை: தவ தத்தா: பத்யா பவதா அபிநந்த்ய பரிணீயமானா: ப்ரஜா: மஹிதபோகவிசேஷஸித்த்யை மத்யே ஸதாம் கிங்கரத்வம் மாங்கல்யஸூத்ரம் இவ பிப்ரதி — (எம்பெருமானே!) தகப்பனார் கன்யகாதானம் பண்ணுமாபோலே ஆசார்யர்களால் உனக்குக் கொடுக்கப்பட்டு பதியான உன்னாலே உகந்து ஏற்றுக்கொள்ளப்படுமவர்களான ப்ரபந்ந ஸந்தானங்கள் அந்தமில் பேரின்பமாகிற நலமந்தமில்லதோர் நாட்டின்பம் ஸித்திப்பதற்காக இடையிலுள்ள காலத்தில் பாகவதபரிசர்யையை மங்கலஸூத்ரம்போல் வகிக்கின்றார்கள்.

*** சரணாகதனான சேதநன் எம்பெருமானுடைய ஸம்பந்தத்தைப் பெறுவது ஆத்மவிவாஹமென்று வழங்கப்பெறும். விவாஹத்திற்கு, கன்னிகையொருத்தியும், கந்யாதானம் பண்ணுகிற தந்தையொருவனும், பரிணேதாவான பதியொருவனும் அவச்யாபேக்ஷிதர்கள். பரிணயமான பிறகு உடனே பதிபோகம் கிடைப்பதில்லை. இக்காலத்து விவாஹம் போலன்றிக்கே ப்ராசீநமும் சாஸ்த்ரீயமுமான விவாஹமாகையாலே பரிபாகதசை அபேக்ஷிதமாயிருக்கும். பதி தன்னிருப்பிடத்திலும், பத்னி தன்னிருப்பிடத்திலுமாகப் பிரிந்துவாழ வேண்டியது முறைமையாகும். அப்படி வாழுங்காலம் இடைக்காலமெனப்படும். அப்படி வாழுங்காலத்தில் பத்னி செய்யவேண்டுவது தன்னுடைய தாய்தந்தையர்முதலான பாகவதர்களுக்கு சுச்ரூஷை. இவ்விஷயங்களை நெஞ்சிற்கொண்டு இனி ப்ரக்ருத விஷயத்தைக் கூர்ந்துகொள்வது. புருஷோத்தமன் முன்னிலையிலே "ஸ்த்ரீப்ராயமிதரம் ஜகத்" என்று

பெண்பிள்ளையென்னத் தகுந்த சேதநன் கன்னிகையாகக்கொள்ளக்கடவன். தஞ்சமாகிய தந்தை யென்னப்படுகிற ஆசார்யன் கந்யாப்ரதாநம் பண்ணுகிற பிதாவாகக் கொள்ளக் கடவன். 'சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:; ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம'' ''ஸ்ரீயாக் ப்ரஹ்மஷி: பிதா'' இத்யாதி ப்ரமாணங்களை இங்கே நினைப்பது. இராமாநுச நூற்றந்தாதியில் ''நீயிந்த மண்ணகத்தே திருத்தித் திருமகள் கேள்வனுக்காக்கியபின்'' என்றருளிச்செய்தபடியே ஆசார்யனேயிறே சேதனனைத் திருத்திப் பணிகொண்டு எம்பெருமானுக்கு ஆக்குபவன். ஆகவே ஆசாரியன் ஜநகஸ்தானத்திலே வைக்கப்பட்டனன். இனி, * பதிம் விச்வஸ்ய * என்றும் * பணைவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளர் * என்றும் * கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ * என்றும் சொல்லுகிறபடியே விச்வபதி லோக பர்த்தாவென்னும் மணவாளர் கைக்கொள்ளுபவராக வாய்த்திருக்கிறார். * பறவையேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின் * என்கிறபடியே அவர்தாம் உகந்து பரிணயம் செய்துகொண்டாராயிற்று. இனி ப்ராப்தியளவும் நடுவுள்ளநாளில் பாகவதகைங்கர்ய விசேஷங்களாலே போதுபோக்குவதுதான் மௌங்கல்ய லக்ஷணமென்று தலைக்கட்டினாராயிற்று. மூலத்தில் [மத்யேஸதாம்] என்றது (ஸதாம் மத்யே) என்றபடியன்று; ஸதாமென்பதற்கு கிங்கரத்வ மென்பதிலே அந்வயம். மத்யே என்றது பரிணய—அநுபவயோர் மத்யே என்றபடி. ... ... ... (30)

दिव्ये पदे नियतकिङ्करताधिराज्यं प्राप्तुं त्वदीयदयया विहिताभिषेकाः ।
आदेहपातमनघाः परिचर्यया ते युञ्जानचिन्त्य ! युवराजपदं भजन्ति ॥ ३१

திவ்யே பதே நியதகிங்கரதாதிராஜ்யம் ப்ராப்தும் த்வதீயதயயா விஹிதாபிஷேகா:,
ஆதேஹபாதமநகா: பரிசர்யயா தே யுஞ்ஜாநசிந்த்ய ! யுவராஜபதம் பஜந்தி. 31

ஹே யுஞ்ஜாநசிந்த்ய ! திவ்யே பதே நியத கிங்கரதா ஆதிராஜ்யம் ப்ராப்தும் த்வதீயதயயா விஹிதஅபிஷேகா: அநகா: ஆதேஹபாதம் தே பரிசர்யயா யுவராஜ பதம் பஜந்தி

யோகிகளால் சிந்திக்கத்தகுந்த பெருமானே! நித்யவிபூதியில் ஸ்வாமிகைங்கர்ய பட்டாபிஷேகத்தைப் பெறுவதற்காக உனது திருவருளால் அபிஷேகம் செய்யப்பெற்ற பாபமற்றவர்கள் தேஹாவஸானத்தளவும் உனக்குத் தொண்டுபூண்டு யுவராஜ பதவியை வஹிக்கிறார்கள்.

* * * உபயவிபூதியிலும் கைங்கர்யமேதான் பரமபுருஷார்த்தமென்னுமிடத்தை ஒரு சமத்காரமாகவருளிச்செய்கிறார். ஆதிராஜ்யப்ராப்தியுள்ளவர்களுக்குப் பெரிய பட்டாபிஷேகத்திற்குப் பூர்வாங்கமாக யுவராஜ (இளவரசு) பட்டாபிஷேகம் செய்வதுண்டன்றோ. ப்ரபந்நர்களுக்கு கைங்கர்ய ஸாம்ராஜ்யபட்டாபிஷேகம் திருநாட்டிலே நடைபெறப்போகிறது; அதற்குப் பூர்வாங்கமாக இந்த விபூதியிலே யௌவராஜ்யபட்டாபிஷேகம் பெறுவிக்கப்பட்டிராநின்றது—என்றவிதனால் புருஷார்த்தம் அக்ருமிங்கும் தாத்பர்யமேயென்றதாயிற்று. முதல் பாதத்தில் ''நியதகிங்கரதா'' என்ற ஸ்தானத்தில் 'தயிதகிங்கரதா' என்றும் பாடமுண்டு. கீழ்சுலோகத்தில் விவாஹம் ப்ரஸ்துதமானபடியாலே பரிணேதாவான பகவானை இந்த சுலோகத்தில் தயிதசப்தத்தினாலருளிச்செய்வது மிகப்பொருத்தமேயாகும். ... (31)

त्वां पाञ्चरात्रिकनयेन पृथग्विधेन वैखानसेन च पथा नियताधिकाराः ।
संज्ञाविशेषनियमेन समर्चयन्तः प्रीत्या नयन्ति फलवन्ति दिनानि धन्याः ॥ ३२

த்வாம் பாஞ்சராத்ரிகநயேந ப்ருதக்விதேந வைகாநஸேந ச பதா நியதாதிகாரா:
ஸம்ஜ்ஞாவிசேஷநியமேந ஸமர்ச்சயந்த: ப்ரீத்யா நயந்தி பலவந்தி திநாநி தந்யா: (32)

ப்ருதக்விதேந பாஞ்சராத்ரிகநயேந வைகாநஸேந பதா ச நியதாதிகாரா: ஸம்ஜ்ஞாவிசேஷநியமேந த்வாம் ப்ரீத்யா ஸமர்ச்சயந்த: தந்யா: திநாநி பலவந்தி நயந்தி } (எம்பெருமானே!) வெவ்வேறு வகைப்பட்ட பாஞ்சராத்ரமார்க்கத்தாலும் வைகாநஸமார்க்கத்தாலும் அதிகாரநியதியுள்ளவர்கள் வாஸுதேவாதிஸம்ஜ்ஞாவிசேஷநியமத்தோடு உன்னை பக்தியோடு திருவாராதனம் செய்து பாக்யசாலிகளாய்க் காலத்தை ஸபலமாகக் கழிக்கிறார்கள்.

* * * அவ்வோ திவ்யதேசங்களில் நடைபெறுகிற திருவாராதனங்கள் சிலவிடங்களிலே பாஞ்சராத்ரக்ரமத்தாலும், சில விடங்களிலே வைகாநஸக்ரமத்தாலும் நடந்து வருகின்றன. ப்ரக்ருதமான விளக்கொளிப்பெருமாள் ஸந்நிதியில் பாஞ்சராத்ரக்ரமமின்றிக்கே வைகாநஸக்ரமமே நடந்துவருவதாகும். இது ஸ்வாமியின் திருவுள்ளத்திற்குப் பாங்கின்றிக்கேயிருந்தாலும் அவ்வோர்யமாகையாலே திருவுள்ளமிசைந்து பேசவேண்டியதாயிற்று. இங்கு (த்வாம்) என்கிற பதத்தினாலே உத்தேஶ்யன் தீபப்ரகாசபகவானேயாதலால் இங்கு பாஞ்சராத்ர ஸரணியைச் சொல்ல ப்ரஸக்தியில்லையாகிலும் இரண்டையும் சேரச்சொல்லி வைத்தது உதாரஹ்ருதயத்தினாலென்பர். பாத்மம், பாரமேச்வரம், பரமம், கபிஞ்ஜலம் முதலான ஸம்ஹிதாபேதங்களையும், மந்த்ரஸித்தாந்தம், ஆகமஸித்தாந்தம், தந்த்ரஸித்தாந்தம் முதலான பேதங்களையுங்கொண்டு (ப்ருதக்விதேந) என்றருளிச்செய்தார். வைகாநஸத்தில் அத்திரிபடலம் மரீசிபடலம் ப்ருகுபடலம் முதலான பேதங்களைக் காண்பது.

[நியதாதிகாரா:] வைகாநஸர் பாஞ்சராத்ராதிகாரிகளாகாமலும், பாஞ்சராத்ரிகள் வைகாநஸாதிகாரிகளாகாமலும் அதிகாரநையத்யம் கொண்டிருக்கும்படியைச் சொல்லுகிறது. [ஸம்ஜ்ஞாவிசேஷநியமேந] பாஞ்சராத்ரத்தில் வாஸுதேவஸங்கர்ஷணாதி ஸம்ஜ்ஞாபேதமிருப்பதுபோலே வைகாநஸத்திலும் விஷ்ணு, புருஷ, ஸத்ய, அச்யுதாதி ஸம்ஜ்ஞாபேதங்களுள்ளனவாகச் சொல்லுகிறார்கள். இங்ஙனே திருவாராதனம் செய்யவல்ல பாக்யசாலிகள் காலத்தைப் பழுதாக்காதே ஸபலமாக்கி வருகிறார்கள் என்றதாயிற்று. ... (32)

वर्णाश्रमादिनियत(स्थिर)क्रमसूत्रबद्धा भक्त्या यथार्हविनिवेशितपत्रपुष्पा ।
मालेव कालविहिता हृदयङ्गमा त्वामामोदयत्यनुपरागधियां सपर्या ॥ ३३

வர்ணாச்ரமாதிநியமஸ்திரஸூத்ரபத்தா பக்த்யா யதார்ஹவிநிவேசிதபத்ரபுஷ்பா,
மாலேவ காலவிஹிதா ஹ்ருதயங்கமா த்வாம் ஆமோதயத்யநுபராகதியாம் ஸபர்யா. 33

வர்ணாச்ரமாதிநியமஸ்திரஸூத்ரபத்தா பக்த்யா யதார்ஹவிநிவேசித பத்ரபுஷ்பா காலவிஹிதா ஹ்ருதயங்கமா மாலா இவ அநுபராகதியாம் ஸபர்யா த்வாம் ஆமோதயதி } (எம்பெருமானே!) வர்ணாச்ரமநியமங்களாகிற கெட்டியான நூலிலே கட்டப்பட்டதும், பக்தியோடுகூட தகுந்தபடி சேர்க்கப்பட்ட பத்ரபுஷ்பங்களையுடையதும் காலத்தில் செய்யப்பட்டதும் அழகியதுமான மாலை போன்றுள்ள தான விரக்தர்களின் திருவாராதனமானது உன்னை யுகப்பிக்கின்றது.

* * * பரமைகாந்திகள் அநுஷ்டிக்கும் வர்ணாச்ரமோசித தருமங்களினால் எம்பெருமான் திருவுள்ளமுகக்கருளும்படியை இதில் அருளிச் செய்கிறார். அவர்கள் நித்யநைமித்திகாதிகர்மாநுஷ்டானங்கள் செய்யும்போது "ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத்கைங்கர்யரூபம்" என்

றுஸங்கல்பித்துக்கொண்டு செய்கையாலே ஸபர்யா என்றே அதனை நிர்தேசிக்கிறார். கைங்கர்யமென்றபடி; திருவாராதனமென்பதுமதுவே. அதை ஒரு மாலையாக வைத்துப் பேசுகிறார் சிலேடையினாலே. மாலைக்கும் ஸபர்யைக்கும் பொதுவாக நான்கு விசேஷணங்கள் இட்டருளுகிறார். [ஸ்திரஸூத்ரபத்தா] மாலையானது அறுசநூலிலே கட்டப்படும். பரமைகாந்திகள் செய்யும் கைங்கர்யமானது வர்ணாச்ரமாதி நியமஸ்திரஸூத்ரபத்தா. "வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக:." என்கிற ப்ரமாணகதியை யறிந்தவர்கள் செய்யுமதாகையாலே வர்ணாச்ரமாதிவ்யவஸ்தையோடு கூடியும், ஆபஸ்தம்பம் போதாயநம் ஆச்வலாயநம் இத்யாதி ஸூத்ரங்களுக்குக் கட்டுப்பட்டுமிருக்கும். [யதார்ஹவிநிவேசித பத்ரபுஷ்பா] மாலையானது இலைகளையும் புஷ்பங்களையும் ஒழுங்குபடச்சேர்த்துத் தொடுக்கப்படும். ஸபர்யையிலோவென்னில் அவரவர்களின் சக்திக்கிணங்க "பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி" என்று கீதாசார்யன் சொன்னபடியே பத்ரபுஷ்பாதிகள் ஸமர்ப்பிக்கப்பெறும். பத்ரமென்கிறது திருத்துழாய்தளத்தை. [காலவிஹிதா] வஸந்தாதிகாலாநுகுணமாக அமைக்கும் பூமாலை. பஞ்சகாலபராயணர்களால் அநுஷ்டிக்கப்படும் ஸபர்யை காலந்தவறாது யதாகாலம் அநுஷ்டிதமாயிருக்கும். [ஹ்ருதயங்கமா] மாலையானது திருமார்பின் ஸம்பந்தமும் பெற்றிருக்கும். பரமைகாந்திகளின் ஸபர்யையானது ஹ்ருதயபூர்ணமாயிருக்கும். "உகந்து பணிசெய்து" என்கிறபடியே. [ஆமோதயதி] மாலைக்கும் ஸபர்யைக்கும் இணங்கின க்ரியாபதமிது. ஆமோதமென்று பரிமளத்திற்கும் ஸந்தோஷத்திற்கும் பெயராகையாலே, மாலை பரிமளிக்கச் செய்கின்றது, ஸபர்யை உகப்பிக்கின்றது என்கை. ... ... .... 33

ब्रह्मा गिरीश इतरेऽप्यमरा य एते निर्धूय तान्निरयतुल्यफलप्रसूतीन् ।
प्राप्तुं तवैव पदपद्मयुगं प्रतीताः पातिव्रतीं त्वयि वहन्ति(भजन्ति) परावरज्ञाः ॥ ३४

ப்ரஹ்மா கிரீச இதரேப்யமரா ய ஏதே நிர்த்தூய தாந் நிரயதுல்யபலப்ரஸூதீந்
ப்ராப்தும் தவைவ பதபத்மயுகம் ப்ரதீதா: பாதிவ்ரதீம் த்வயி பஜந்தி பராவரஜ்ஞா:. 34

| | |
|---|---|
| ப்ரதீதா: பராவரஜ்ஞா: ப்ரஹ்மகிரீச: இதரே அபி ஏதே அமரா: நிரயதுல்ய பலப்ரஸூதீந் தாந் நிர்த்தூய தவ ஏவ பதபத்மயுகம் ப்ராப்தும் த்வயி பாதிவ்ரதீம் பஜந்தி | ப்ரக்யாதர்களான பரமைகாந்திகள், பிரமனும் சிவனும் மற்றும் இந்திராதிகளுமாக எந்த தேவர்கள் வேதங்களில் ஓதப்பட்டிருக்கின்றார்களோ, அவர்களெல்லாரும் நரகப்ராயமான பலன்களைக் கொடுப்பவர்களென்று அவர்களை விட்டொழித்து (எம்பெருமானே!) உன்னுடைய திருவடிகளைப்பெறுவதற்கு உன்னிடத்தில் கற்புநிலையை மேற்கொள்கின்றனர். |

* * * பகவத்பஜநத்தோடொக்க தேவதாந்தர பஜனமும் பண்ணுவார் சிலருண்டேயுலகில்; அத்தேவர்களும் [அக்நிவருணயமாதிகளும்] சில பலன்களைக் கொடுப்பதாக வேதங்களிற் சொல்லப்பட்டிராநின்றதே; அங்ஙனே தேவதாந்தர பஜனம் பண்ணுவதும் யுக்தமேயோ? என்று சிலர்க்குத் தோன்றக்கூடிய சங்கையைப் பரிஹரித்தருளுகிறார் இந்த சுலோகத்தினால். பரமைகாந்திகளின்படி அதுவன்று என்கிறார். "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கலஸூத்ரம்போலே திருமந்த்ரம்" என்று திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமாகிற மங்கலஸூத்ரத்தாலே கட்டுண்ட பரமைகாந்திகள் தேவதாந்தரங்களினால் கிடைக்கும் பலன்களை நரகநிர்விசேஷமாக நினைப்பவர்களாகையாலே அவர்களுடைய ஸேவையிலே ஸென்றமாட்டார்கள். "கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டாளை

மக்காலறியாக் குலமகள் போல் * என்ற குலசேகராழ்வாரருளிச்செயலின்படியே பதிவ்ரதா தர்மத்திலே தலைசிறந்து நின்ற பகவத்ஸ்வரூபவண்மையக நிரூபணீயர்களாயிருப்பர்களென்றதானை என்றவாயிற்று. "ஏதே வை நிரயாஸ் தாத! ஸ்தாநஸ்ய பரமாத்மந:" என்கிற ப்ரமாண த்ருஷ்டியாலே 'நிரயதுல்யபலப்ரஸூஹீந்' என்றருளிச்செய்தது. [பராவரஜ்ஞா:] இன்னது பரம், இன்னது அவரம் என்று பகுத்தறியவல்லவர்களென்கை. "தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" இத்யாதி ப்ரமாணங்களில் எம்பெருமானையே பராவரனென்று சொல்லியிருக்கையாலே எம்பெருமானையுள்ளபடி யுணர்ந்தவர்கள் என்கிற பொருளும் பொருந்தும். "பரே அவரே யஸ்மாத் ஸ:—பராவர:" என்று வ்யுத்பத்தியாகக் கடவது. பரே—மேம்பட்டவர்களென்று சொல்லப்படுமவர்களெல்லாரும், யஸ்மாத் அவரே—எம்பெருமானைப்பார்க்கிலும் தண்ணியர்கள் என்றதாகப் பொருள் காண்க. ... ... ... (34)

नाथ ! त्वदिष्टविनियोगविशेषसिद्धं शेषत्वसारमनपेक्ष्य निजं गुणज्ञाः ।
भक्तेषु ते वरगुणार्णव ! पारतन्त्र्याद्दास्यं भजन्ति विपणिव्यवहारयोग्यम् ॥ ३५

நாத! த்வதிஷ்டவிநியோக விசேஷஸித்தம் சேஷத்வஸாரமநபேக்ஷ்ய நிஜம் குணஜ்ஞா:,
பக்தேஷு தே வரகுணார்ணவ! பாரதந்த்ர்யாத் தாஸ்யம் பஜந்தி விபணிவ்யவஹாரயோக்யம். 35

| | |
|---|---|
| ஹே நாத! ஹே வரகுண அர்ணவ! குணஜ்ஞா: த்வத் இஷ்டவிநியோக விசேஷஸித்தம் நிஜம் சேஷத்வஸாரம் அநபேக்ஷ்ய பாரதந்த்ர்யாத் தே பக்தேஷு விபணிவ்யவஹார யோக்யம் தாஸ்யம் பஜந்தி | எம்பெருமானே! சிறந்த குணக்கடலே! ஸ்வரூபஜ்ஞர்களான பரமைகாந்திகள் உன்னுடைய யதேஷ்டவிநியோகார்ஹமான தங்களுடைய சேஷத்வச் சிறப்பை விரும்பாமல் பாரதந்த்ரியத்தினால் உன்னுடைய பக்தர்களிடத்தில் க்ரயவிக்ரயார்ஹமான சேஷத்வகாஷ்டையை அடைகிறார்கள். |

* * * பகவச்சேஷத்வத்திற்காட்டிலும் சிறந்தது பாகவத சேஷத்வம்; அதனிலும் சிறந்தது தத்பக்தபக்த சேஷத்வம். எம்பெருமான் தானும் "மம மத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகா பவேத்" என்றருளிச் செய்யக் காண்கையாலும், "த்வத்ப்ருத்யப்ருத்யபரிசாரக ப்ருத்ய ப்ருத்யப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத!" என்றும் * அடியாரடியார் தமடியாரடியார்தமக்கடியாரடியார்தம் அடியாரடியோங்களே * என்றும் ஆழ்வார்கள் தாமும் அநுஸந்திக்கக் காண்கையாலும் பகவச்சேஷத்வத்தளவிலும் நில்லாமல் பாகவதசேஷத்வத்தளவிலும் நில்லாமல் அநேக பர்வவ்யவதாநதுங்கமான சேஷத்வகாஷ்டையை யுடையவர்களுடைய பெருமையைப் பேசிற்றாயிற்று இந்த ச்லோகம். விபணிவ்யவஹார யோக்யமென்றதின் தாற்பரியமாவது—விபணியாவது கடைவீதி; "விபணி: பண்யவீதிகா" என்று அமரகோசம். அங்கே சரக்குகளைவாங்குமவர்கள் உடனே அதை வேறு சிலர்க்கு விற்பதும், அவர்கள்தாமும் வேறு சிலர்க்கு விற்பதுமாய் மாறிக்கொண்டே செல்லும்; அவ்வாறாக கொடுப்படியைச் சொல்லுகிறது. யதிராஜஸப்ததியில் "ஹரிபக்ததாஸ்யரஸிகா: பரஸ்பரம் க்ரயவிக்ரயார்ஹதயா ஸமிந்ததே" என்றதையும், "பேசுவாரடியார்கள் எந்தம்மை விற்கவும் பெறுவார்களே" என்று பெரியாழ்வாரருளிச் செய்ததையும், இத்தனைக்கும் மூலமாக "தவத்பக்தி நிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹ:" என்று மஹர்ஷிகள் சொல்லிற்றையும் இங்கு ஸ்மரிப்பது. ... ... ... ... (35)

सद्भिस्त्वदेकशरणैर्नियतं सनाथाः सर्पादिवच्चदपराधिषु दृश्याताः ।
धीरास्तृणीकृतविरिञ्चिपुरंदराद्याः कालं क्षिपन्ति भगवन्करणैस्त्वदन्ध्यैः ॥ ३६

ஸத்பிஸ் த்வதேகசரணைர் நியதம் ஸநாதா: ஸர்ப்பாதிவத் த்வதபராதிஷு தூரயாதா:
தீராஸ் த்ருணீக்ருத விரிஞ்ச புரந்தராத்யா: காலம் க்ஷிபந்தி பகவந்! கரணைரவந்த்யை: (37)

ஹே பகவந்! த்வதேகசரணை: ஸத்பி: நியதம் ஸநாதா: த்வத் அபராதிஷு ஸர்ப்பாதிவத் தூரயாதா: தீரா: த்ருணீக்ருதவிரிஞ்சபுரந்தராத்யாஸ் ஸந்த: அவந்த்யை: கரணை: காலம் க்ஷிபந்தி

எம்பெருமானே! உன்னையே தஞ்சமென்று பற்றினவர்களோடே நித்யஸஹவாஸம் செய்பவர்களும், உன் திறத்திலே அபசாரப்படுமவர்களைக் கண்டால் ஸர்ப்பாதிகளைக் கண்டாற்போலே நெடுந்தூரமோடுமவர்களுமான பரமைகாந்திகள் பிரமனிந்திரன் முதலானவர்களை த்ருணமாக நினைத்தவர்களாய்க் கொண்டு கரணக்ராமங்களை ஸபலமாக்கா நின்றுகொண்டு போதுபோக்குகின்றனர்.

* * * ஆபந்நர்களான பரமைகாந்திகளின் காலக்ஷேப ப்ரகாரத்தை யருளிச் செய்கிறாரிதில். [धीराः—धीमतामग्रेसरा इत्यर्थः। * तस्य धीराः परिजानन्तीत्यत्र एवं व्याचक्षते पूर्वे।] [த்வதேகசரணைஸ் ஸத்பி: நியதம் ஸநாதா:] எம்பெருமானையே தஞ்சமென்று பற்றினவர்களையே தமக்கு நாதராகக் கொண்டவர்கள். "பேராளன் பேரோதும் பெரியோரையொருகாலும் பிரிகிலேனே" என்றிருக்குமவர்கள். * செல்வத்தண்சேறை யெம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என்தலைமேலாரே * என்றிருக்குமவர்கள். [த்வதபராதிஷு ஸர்ப்பாதிவத் தூரயாதா:] ஸம்ஸாரிகளைக்கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலே நினைத்து வெருவியிருக்கும்படி ஸதாசார்யோபதேசமாகையாலே, ஸர்ப்பத்தைக்கண்டால் அஞ்சிப் பதறியோடுமாபோலே பகவத் விரோதிகளைக் கண்டால் ஓடுமவர்கள். [த்ருணீக்ருத விரிஞ்ச புரந்தராத்யா:] "த்ருணீக்ருத விரிஞ்சாதிநிரங்குச விபூதய:, ராமாநுஜபதாம்போஜஸமாச்ரயணசாலிந:" என்கிறபடியே * ஆனைசெல்வத்து அரம்பையர்கள் தற்சூழ வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேனென்றிருக்குமவர்கள். [அவந்த்யை: கரணை: காலம் க்ஷிபந்தி] * யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா.* என்றுகொண்டு அவன்தந்த கரணங்களை அவனுக்கே உறுப்பாக்கிக் காலக்ஷேபம் பண்ணுகின்றார்களென்கை. ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையவனாயிருக்கும் பரமைகாந்திகளோடே ஸஹவாஸம் பண்ணப்பெற்றால் அவர்களுடைய போதுபோக்கிருக்கும்படி சொல்லவேணுமோ? ... ... (36)

वागादिकं मनसि तत्पवने स जीवे भूतेष्वयं पुनरसौ त्वयि तैस्समेति ।
साधारणोत्क्रमणकर्म समाश्रितानां यन्त्रा मुकुन्द! भवतैव यथा यमादेः ॥ ३७

வாகாதிகம் மநஸி தத் பவநே ஸ ஜீவே பூதேஷ்வயம் புநரஸௌ த்வயி தை: ஸமேதி,
ஸாதாரணோத்க்ரமணகர்ம ஸமாச்ரிதாநாம் யந்த்ரா முகுந்த! பவதைவ யதா யமாதே:. 37

ஹே முகுந்த! வாகாதிகம் மநஸி ஸமேதி, தத் பவநே, ஸ: ஜீவே, அஸௌ பூதேஷு; அபம புநரபி தைஸ் ஸஹ த்வயி ஸமேதி; (இதி) ஸாதாரண உத்க்ரமண கர்ம ஸமாச்ரிதாநாம் (அபி) யந்த்ரா பவதா ஏவ; யமாதே: யதா (ததா)

எம்பெருமானே! (நிர்யாணகாலத்தில்) வாக்குமுதலான பத்து இந்த்ரியங்களும் மனஸ்ஸிலே சேருகிறது; பத்து இந்த்ரியங்களோடு கூடின அந்த மனஸ்ஸானது ப்ராண வாயுவிலே சேருகிறது; அது ஜீவாத்மாவிலே சேருகிறது; ஜீவன் பூதங்களிலே சேருகிறான்; இவன் மீண்டும் பூதாதிகளோடு கூட உன்னிடத்தில் சேருகிறான். இங்ஙனம் ஸர்வப்ராணி ஸாதாரணமாகச் சொல்லப்பட்ட ஜீவோத்க்ரமணமானது ப்ரபந்நர்களுக்கும் ஸர்வநியாமகனான உன்னாலேயே யமன் முதலான ஆதிகாரிகபுருஷர்களுக்கு எப்படியோ அப்படியே ஆகிறது.

*** சாரீரகமீமாம்ஸையில் நான்காமத்யாயத்தில் இரண்டாம் பாதத்தில் வாகதிகரணம், மனோதிகரணம், அத்யக்ஷாதிகரணம், பூதாதிகரணம், ஆஸ்ருத்யதிகரணம், பரஸம்பத்த்யதிகரணம் ஆக இவ்வாறு அதிகரணங்களின் ரூபேயத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு அருளிச்செய்வது இந்தச்லோகம். சாந்தோக்யத்தில் (6–8–6) * **अस्य सोम्य! पुरुषस्य प्रयतो वाङ्मनसि संपद्यते मनः प्राणे** * இத்யாதியாக ஓதப்பட்டுள்ளது. வாக்கு முதலான பத்து இந்த்ரியங்களும் மனஸ்ஸில் ஸம்பந்நமாகிறது; அவற்றோடு கூடின மனஸ்ஸு ப்ராணனில் ஸம்பந்நமாகிறது; அவற்றோடுகூடின ப்ராணன் ஜீவாத்மாவில் ஸம்பந்நமாகிறது. அவற்றோடு கூடின ஜீவன் பூதங்களிலே ஸம்பந்நனாகிறான். அந்த ஜீவன் மறுபடியும் பூதாதிகளோடுக்கூட பரமபுருஷனிடத்தில் ஸம்பந்நனாகிறான் என்று சொல்லப்பட்டிருக்கின்ற உத்க்ரமணமானது ஸர்வஜந்து ஸாதாரணம்; ஆதிகாரிகபுருஷர்களான யமன் முதலானவர்க்கும் இதேக்ரமமொழிய வேறு க்ரமமில்லை. ப்ரபந்நர்களுக்கும் இதேக்ரமந்தான் — என்று சொல்லுகிறபடியால் தேறுவது என்னென்னில்; ஜீவோத்க்ரமணத்தில் யமாதிகளுக்கு அதிகாரமொன்றுமில்லையென்றதாயிற்று. ப்ரபந்நர்களுக்கு விசேஷம் அடுத்த ச்லோகத்தில் காண்க.

மேலெடுத்த உபநிஷத்வாக்யத்தில் ஸம்பத்யதே என்பதற்கு 'லீயதே' என்று பூர்வபக்ஷார்த்தம். விச்ரமார்த்தமான ஸம்யோகவிசேஷமென்பது ஸித்தாந்தார்த்தம். இது "அவிபாகோ வசநாத்" என்கிற ஸூத்ரஸித்தம். இந்த ச்லோகத்தின் முடிவில் "அர்யமாதே:" என்றும் பாடம். ... .... .... ... ... (37)

**सव्यान्ययोरयनयोर्निशि वासरे वा संकल्पितायुरवधीन्सपदि प्रपन्नान् ।**
**हार्दः स्वयं निजपदे विनिवेशयिष्यन्नाडीं प्रवेशयसि नाथ! शताधिकां त्वम् ॥** ३८

ஸவ்யாந்யயோரயநயோர் நிசி வாஸரே வா ஸங்கல்பிதாயுரவதீந் ஸபதி ப்ரபந்நாந்
ஹார்த: ஸ்வயம் நிஜபதே விநிவேசயிஷ்யந் நாடீம் ப்ரவேசயஸி நாத! சதாதிகாம் த்வம். 38

ஹே நாத! ஸவ்யாந்யயோ: அயநயோ: நிசி வா வாஸரே வா ஸங்கல்பித ஆயுரவதீந் ப்ரபந்நாந் த்வம் ஹார்த்தஸ்ஸந் ஸ்வயம் நிஜபதே விநிவேசயிஷ்யந் ஸபதி சதாதிகாம் நாடீம் ப்ரவேசயஸி.

எம்பெருமானே! தக்ஷிணாயன உத்தராயணங்களிலோ, இரவிலோ பகலிலோ வாழ்க்கை முடியுமளவினரான ப்ரபந்நர்களை நீ ஹார்த்தபுருஷனாய்க்கொண்டு தானே தன்னுடைய திருநாட்டிலே கொண்டுபோய் வைக்கக்கருதி சதாதிக நாடியென்கிற ஸுஷும்நா நாடியை ப்ரவேசிக்கச் செய்தருளுகிறாய்.

*** சாரீரகமீமாம்ஸையில் கீழ்க்குறித்தவிடத்திலேயே [4-2.] ரச்ம்யதிகரணமும் தக்ஷிணாயநாதிகரணமும் உள்ளது. நிசிமரணமும் தக்ஷிணாயநமரணமும் சில ஸ்ம்ருதிகளில் கர்ஹிதமாயிருப்பது ப்ரஹ்மவித்துக்களல்லாதாரைப்பற்றியதென்றும், ப்ரஹ்மவித்துக்கள் * தததிகமாதிகரணப்படியே ஆரப்த அச்லிஷ்ட பூர்வோத்தர பாபர்களாகையாலே அவர்களுக்கு எந்த காலத்தில் நிர்யாணம் நேர்ந்தாலும் ப்ரஹ்ம ப்ராப்திக்குக் குறையில்லையென்றும் அவ்வதிகரணங்களில் ஸித்தாந்திதமாயிருக்கையாலே அதைத் திருவுள்ளம்பற்றிப் பூர்வார்த்தமருளிச்செய்தபடி. மேலே குறித்த அதிகரணங்களுக்கு முன்னே * ததோகோதிகரணத்தில் * तदोकोग्रज्वलनं...........हार्दानुगृहीतः शताधिकया * என்கிற ஸூத்ரத்தின் நிர்ணயத்தைபடியொற்றி உத்தரார்த்தமருளிச்செய்தபடி. ஜீவோத்க்ரமணமானது ப்ரஹ்மவித்துக்கள் இதரர் என்கிற வாசியற ஸர்வப்ராணி ஸாதாரணமாயிருந்தாலும் ப்ரஹ்மவித்துக்களுக்கு ப்ரஹ்மப்ராப்தியானது * शतं चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिस्सृतैका। तयोर्ध्वमायन्नमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति * என்று கடவல்லியில் ஓதினபடியே மூர்த்தந்யநாடியினாலே நிஷ்க்ரமண பூர்வகமாக ஸித்திக்கின்றதென்று அறிவிக்கப்பட்டது. ... (38)

अर्चिर्दिनं विशदपक्ष उदक्प्रयाणं संवत्सरो मरुदशीतकरश्शशाङ्कः।
सौदामनी जलपतिर्वलजित्प्रजेश इत्यातिवाहिकसखो नयसि स्वकीयान्॥ ३९

அர்ச்சிர்திநம் விசதபக்ஷ உதக்ப்ரயாணம் ஸம்வத்ஸரோ மருதசீதகர: சசாங்க:,
ஸௌதாமநீ ஜலபதிர்வலஜித் ப்ரஜேச: இத்யாதிவாஹி கஸகோ நயஸி ஸ்வகீயாந். 39

| | |
|---|---|
| அர்ச்சி: திநம் விசதபக்ஷ: உதக்ப்ரயாணம் ஸம்வத்ஸர: மருத் அசீதகர: சசாங்க: ஸௌதாமநீ ஜலபதி: வலஜித் ப்ரஜேச: இதி ஆதிவாஹிகஸக: ஸந் ஸ்வகீயாந் நயஸி | (எம்பெருமானே!) அக்நி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு, ஸூர்யன், சந்திரன், வித்யுத், வருணன், இந்திரன், ப்ரஜாபதி என்னுமிந்த ஆதிவாஹிகர்களைத் துணைகொண்டு தன்னடியார்களை (ஸ்வஸ்தானத்திற்குக்கொண்டுபோகிறாய். |

*** இம் "வாமாதிகம் மாலவி" என்கிற(37ஆம்) சுலோகத்தில் ஜீவோத்க்ரமணம் ஸர்வப்ராணிஸாதாரணமாகச் சொல்லப்பட்டாலும் அநந்யார்ஹமாகியான பலவும் ப்ரபந்நர்களுக்கு அஸாதாரணமாதலால் இச்சுலோகத்தில் மூர்த்தந்யநாடியால் உத்கிரமணத்தைச் சொல்லி இந்த சுலோகத்தில் அர்ச்சிராதி மார்க்கத்தாலே அழைத்துச் செல்லும்படியையருளிச் செய்கிறார். நடாதூரம்மாள் அருளிச் செய்த பரமார்த்தச்லோகத்வயத்தில் *हार्दानुग्रहलब्धमध्यधमनिद्वारा बहिर्निर्गतः* என்று முதல் சுலோகத்தை முடித்து *मुक्तोऽर्चिर्दिन-पूर्वपक्षषडुदङ्मासाब्दवातांशुमद्ग्लौविद्युद्वरुणेन्द्रधातृमहितः* என்று அடுத்த சுலோகத்தில் அருளிச் செய்த ப்ரக்ரியையின்படியே இங்கு அருளிச் செய்கிறாராயிற்று. அதில் *सीमान्तसिन्ध्वाप्लुतः* என்று சொல்லப்பட்ட விரஜாஸ்நாநம் இங்கே சொல்லப்படாதிருந்தாலும் அதுவும் அநுஸந்தேயம். .... .... ... (39)

त्वच्छेषवृत्त्यनुगुणैर्महितैर्गुणौघैराविर्भवत्ययुतसिद्धनिजस्वरूपे।
त्वल्लक्षणेषु नियनेष्वपि भोगमात्रे साम्यं भजन्ति परमं भवता विमुक्ताः॥ ४०

த்வச்சேஷ வ்ருத்த்யநுகுணைர் மஹிதைர் குணௌகை: ஆவிர்ப்பவத்யயுதஸித்த நிஜஸ்வரூபே,
த்வல்லக்ஷணேஷ்வ நியதேஷ்வபி போகமாத்ரே ஸாம்யம் பஜந்தி பரமம் பவதா விமுக்தா:. 40

விமுக்தா: த்வத் சேஷவ்ருத்தி அநுகுணை: மஹிதை: குணௌகை: (ஸஹ) அயுதஸித்த நிஜஸ்வரூபே ஆவிர்ப்பவதி (ஸதி) த்வத் லக்ஷணேஷு நியதேஷு அபி போகமாத்ரே பவதா பரமம் ஸாம்யம் பஜந்தி

(எம்பெருமானே!) முக்தாத்மாக்கள் உன்பக்கலில் அடிமைத் தொழிலுக்குத் தகுதியான சிறந்த குணங்களோடுகூட அப்ருதக்ஸித்தஸ்வரூபம் ஆவிர்ப்பவித்தவளவிலே உன்னுடைய லக்ஷணங்கள் உனக்கு அஸாதாரணங்களாயிருக்கச் செய்தேயும் ப்ரஹ்மாநுபவத்தில் மட்டும் உன்னோடு கூட ஸாம்யத்தை அடைகிறார்கள்.

* * * சாரீரகமீமாம்ஸையின் அவஸாநத்தில் "ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணம் ஸூசித்தம். அதில் "போகமாத்ர ஸாம்ய லிங்காச்ச" என்பது ஒரு ஸூத்ரம். அதைத் திருவுள்ளத்திலே கொண்டு இந்த ச்லோகமருளிச் செய்கிறபடி. முண்டகோபநிஷத்தில் "तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति" என்று முக்தாத்மாவுக்குப் பரமாத்மாவோடு பரமஸாம்யாபத்தி ஓதப்பட்டுள்ளது. இங்கு வெறும் ஸாம்யம் சொல்லாமல் பரமஸாம்யம் சொல்லியிருக்கையாலே ஸர்வாத்மநா பரமபுருஷனோடு ஸாம்யம் ப்ராப்தமாக வேணும். ஸர்வலோகங்களுக்கும் ஸ்ரஷ்டாவாயிருக்கை, நியாமகனாயிருக்கை முதலான தன்மைகளும் முக்தனுக்கு ப்ராப்தமானாலொழிய பரமஸாம்ய ச்ருதி பொருந்தாது— என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக இந்த அதிகரணம் அதை நிரஸித்து ஸித்தாந்தார்த்தத்தை விளக்கத் தோன்றியது. "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதிச்ருதியாலும், "ய: ப்ருதிவ்யா மந்தரோ யமயதி" இத்யாதிச்ருதிகளாலும் பரப்ரஹ்மத்திற்கே அஸாதாரணலக்ஷணமாக ஓதப்பட்ட ஜகத்காரணத்வ நியாமகத்வாதிகள் முக்தனுக்கு ஸம்பவிக்கமாட்டா; ஸம்பவிக்குமாகில் அவை பரப்ரஹ்மத்திற்கு அஸாதாரண லக்ஷணமாயிருக்க முடியாது. ஆனால் எந்த அம்சத்தில் பரமஸாம்யமென்னில்; பரமஸாம்யத்தைச் சொல்லுகிற ச்ருதிவாக்கியத்தில் "புண்யபாபே விதூய நிரஞ்சந:" என்று ஓதியிருக்கையாலே பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்திற்கு ப்ரதிபந்தகமாயிருந்த புண்ணியபாபரூப கருமங்கள் தத்ப்ராயச்சித்தரூபமான ப்ரஹ்மவித்யையினால் தொலைந்தொழிந்தவாறே ப்ரதிபந்தக நிவ்ருத்தியின் பலனாக ப்ராப்தமாகக்கூடிய ப்ரஹ்மாநுபவரூபமான பேற்றில் தான் ஸாம்யம் ஸங்கதமாகும். ஸாம்யத்தில் பரமத்வவிசேஷணத்திற்கு ப்ரயோஜனம் யாதென்னில், அநுபவிக்கப்படுகிற ப்ரஹ்மத்தினிடத்திலே தத்குணங்களையும் தத்விபூதிகளையும் ஏகதேசமும் விடாதே முற்றவும் அநுபவிக்கையேயாம். இதுதான் "ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" என்கிற தைத்திரீய ச்ருதியினாலும் விசதீகரிக்கப்பட்டது. இவ்விஷயங்களை ஸங்க்ரஹிக்கிறதாயிற்று இந்த ச்லோகம். இதில் "தவச்சேஷவ்ருத்த்யநுகுணை: மஹிதை: குணௌகை:" என்கிற பதங்கள் ஸாபிப்ராயங்களை. ஆத்மாவுக்கு என்றுமழியாததான சேஷத்வத்திற்கு அநுகுணமானபேறு ப்ராப்தமாகுமேயொழிய தத்விபரீதமானபேறு ப்ராப்தமாக வழியில்லையென்கை. (40)

इत्थं त्वदेकशरणैरनघैरवाप्ये त्वत्किङ्करत्वविभवे स्पृहयाऽपराध्यन् ।
आत्मा ममेति भगवन्भवतैव गीतान्प्राचो निरीक्ष्य भरणीय इह त्वयाऽहम् ॥ ४१

இத்தம் த்வதேக சரணைரநகைரவாப்யே த்வத்கிங்கரத்வ விபவே ஸ்ப்ருஹயா ऽபராத்யந்,
ஆத்மா மமேதி பகவந்! பவதைவ கீதாந் ப்ராசோ நிரீக்ஷ்ய பரணீய இஹ த்வயாऽஹம். 41

ஹே பகவந்! இத்தம் த்வத் ஏக சரணை: அநகை: அவாப்யே த்வத்கிங்கரத்வவிபவே ஸ்ப்ருஹயா அபராத்யம் அஹம்। பவதா ஏவ மம ஆத்மா இதி நிதாந் ப்ராச: நிரீக்ஷ்ய இஹ த்வயா பாணீய:.

எம்பெருமானே! இப்படி உன்னையே தஞ்சமென்று பற்றின பரமைகாந்திகளாலேயே பெறுதற்குரியதான உன்னுடைய கைங்கர்ய ஸ்ரீயில் ஆசைப்படுவதனால் மஹாபராதியான நான் "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று கீதையில் உன்னாலே கொண்டாடப் பட்டவர்களான பூர்வபுருஷர்களை நோக்கி உன்னால் ரக்ஷிக்கத்தக்கவனாகிறேன்.

*** திருவாய்மொழியில் *மாசூணாவான்கோலத்தமரர்கோன் வழிப்பட்டால், மாசூணாவுன்பாதமலர்ச்சோதி மழுங்காதே* என்று எம்பெருமான் திறத்திலே அமரர்கோன் செய்யும் வழிபாடும் அவத்யாவஹமென்றாராழ்வார். ஆளவந்தார் *धिगशुचिमविनीतं निर्दयं मामलज्जं परमपुरुष! योऽहं योगिवर्याग्रगण्यैः। विधिशिवसनकाद्यैर्ध्यातुमत्यन्तदूरं तव परिजनभावं कामये कामवृत्तः॥* என்று தாம் எம்பெருமானுக்குக் கைங்கரியம் பண்ணவிரும்பியதைப் பற்றி அநுதபித்தார். அந்தக்கட்டளையிலே இங்கு ஆசிரியர்தாமும் அநுதாபம் காட்டிப் பேசுகிறாராயிற்று. கீழ்சுலோகங்களில் முமுக்ஷுக்களுக்கும் முக்தர்களுக்கும் விளையக்கடவ பேறுகளையருளிச் செய்ததானது தமக்கும் அந்தப்பேறு கிடைக்கவேணுமென்கிற அபிநிவேசத்தாலேயிறே. அந்த அபிநிவேசம் ஸ்வரூபாநுரூபமாயிருந்ததேயாகிலும் தம்முடைய நைச்யத்தைச் சிந்தித்தவாறே "நீசையானவாரஸ்திரீ ஸார்வபௌமனைக் கைப்பிடிக்க விரும்புமா போலேயிருப்பதொன்றிறேயிது!" என்று தோன்றி அநுசயத்தைக் காட்டுகிறார். "நெடுநாள் அந்யபரையாய்ப் போந்த பார்யை லஜ்ஜாபயங்களின்றிக்கே பர்த்ருஸகாசத்திலே வந்து என்னையங்கீகரிக்கவேணுமென்றபேக்ஷிக்குமாபோலேயிருப்பதொன்றிறே இவன் பண்ணும் ப்ரபத்தி" என்கிற திவ்யசாஸ்த்ர ஸ்ரீஸூக்தி இந்த சுலோகமாக வடிவெடுத்தபடி. வஸ்துஸ்திதி இங்ஙனேயிருந்தாலும், ஸ்வரூபாநுரூபமான கைங்கரியம் பண்ணித்தானாக வேண்டும்; அதற்குப்பாரிக்கவும் வேண்டியிராநின்றது. கீதையிலே ஏழாமத்யாயத்திலே "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்று ஜ்ஞாநிகளை ஆத்மாவாக அபிமானித்திருப்பதொன்றுண்டே, அந்த அபிமானத்திற்கு அடியேன் நேர்கொடுநேர் இலக்காகைக்கு ப்ரஸக்தியில்லையாயினும், அவ்வபிமான பாத்ரபூதர்களான பெரியாருடைய தொடர்பையிட்டு அடியேனை அபிமானித்தருளவேணும் என்றாராயிற்று. "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய" என்று ஆளவந்தாரருளிச் செய்த கட்டளை. ... ... ... (41)

पद्मामहीप्रभृतिभिः परिभुक्तभूम्नः का हानिरत्र मयि भोक्तरि ते भवित्री।
दुष्येत्किमभ्रतटिनी तव देवसेव्या दुर्वारतर्षचपलेन शुनाऽवलीढा॥ ४२

பத்மாமஹீப்ரப்ருதிபி: பரிபுக்தபூம்ந: கா ஹாநிரத்ர மயி போக்தரி தே பவித்ரீ?
துஷ்யேத் கிமப்ரதடிநீ தவ தேவஸேவ்யா துர்வாரதர்ஷ சபலேந ஶுநாऽவலீடா. 42

பத்மாமஹீப்ரப்ருதிபி: பரிபுக்தபூம்ந: தே மயி போக்தரி (ஸதி) கா ஹாநி: அத்ர பவித்ரீ? தேவஸேவ்யா தவ அப்ரதடிநீ துர்வாரதர்ஷ சபலேந ஶுநா அவலீடா (ஸதி) கிம் துஷ்யேத்?

(எம்பெருமானே!) ஸ்ரீதேவி பூதேவி முதலானவர்களால் அநுபவிக்கப்பட்ட பெருமையையுடைய உன்னை நானும் அநுபவித்தால் இதனால் உனக்கு என்ன ஹாநிவிளையும்? தேவர்கள் குடைந்தாடத்தக்க கங்கையானது மிக்க தாஹமுள்ள நாயினால் நக்கப்பட்டவளவால் கெடுதலடையுமோ?

* * * எம்பெருமானை யணுகுவதற்கும் தாம் அநர்ஹரென்றார் கீழ்ச்லோகத்தில்; ஒருவாறு தேற்ற மடைகின்றாரிதில். திருமகள் மண்மகள் ஆய்மகள் முதலான நாச்சிமார்களும் சேஷசேஷாசந கருடமுக நித்யஸூரிகளும் மற்றுமுள்ள முக்தர்களும் அநுபவிக்கும் தேவரீரை உபகல்பாயனான அடியேனும் ஒரு மூலையில் அநுபவித்தால் வந்தப்பெருமைக்கு என்ன ஹாநி விளைந்திடும்? சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கிப் பெருகினதாய், * கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடகிற்குமதாய், * இமவந்தந்தொடங்கி இருங்கடலளவும் உலகங் குடைந்தாடுமதான தேவகங்கையிலே பெருவிடாய் கொண்டதொரு சுநகம் சிறிது தண்ணீர் பருகிற்றென்றால் அதனால் அக்கங்கைக்கு ஒரு கெடுதல் விளைந்ததாகுமோ? என்று சித்தஸமாதானஞ்செய்து கொண்டபடி. கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * ஜாநந்நபி ஹாகில மாம் * என்கிற ச்லோகத்திலும், ஸ்ரீஸ்தவத்தில் * கேஷாஞ்சித்யாநபி துஷ்டபுத்திரபி * என்கிற ச்லோகத்திலும் இங்ஙனே அநுஸந்தித்ததை நினைப்பது. ... ... ... (42)

**सत्त्वानि नाथ! विविधान्यभिसंजिघृक्षोः संसारनाट्यरसिकस्य तवास्तु तृप्त्यै ।**
**प्रत्यक्पराङ्मुखमतेरसमीक्ष्यकर्तुः प्राचीनसज्जनविडम्बनभूमिका मे ॥ ४३**

ஸத்வாநி நாத! விவிதாந்யபிஸஞ்ஜிக்ருக்ஷோ: ஸம்ஸார நாட்ய ரஸிகஸ்ய தவாஸ்து த்ருப்த்யை,
ப்ரத்யக்பராங்முகமதே அஸமீக்ஷ்யகர்த்து: ப்ராசீந ஸஜ்ஜந விடம்பந பூமிகா மே. 43

ஹே நாத! ப்ரத்யக்பராங்முகமதே: அஸமீக்ஷ்ய கர்த்து: மே ப்ராசீந ஸஜ்ஜநவிடம்பந பூமிகா, விவிதாநி ஸத்வாநி அபிஸஞ்ஜிக்ருக்ஷோ: ஸம்ஸார நாட்யரஸிகஸ்ய தவ த்ருப்த்யை அஸ்து.

எம்பெருமானே! ஆத்மஜ்ஞாநஸம்பாதனத்திலே த்ருஷ்டியற்றவனும், மேல்விளைவது நோக்காமல் மனம்போனபடி செய்பவனுமான என்னுடைய (இந்த) பூர்வாசார்ய ப்ரக்ரியையை அநுகரிக்கும் வேஷமானது, பல்வகைப்பட்ட ப்ராணிகளையும (வலைவைத்துப் பிடிக்குமாபோலே) பிடிக்க நினைத்திருப்பவனும், ஸம்ஸார நாடக ரஸிகனுமான வுனக்கு த்ருப்தியை விளைக்குமதாகுக.

** அடியேன் பண்ணுகிற நைச்யாநுஸந்தானந்தானும் ஹ்ருதயபூர்வமாகில் குறையில்லை. முன்னோர்களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஹார்த்தமாகச் செய்தருளின நைச்யாநுஸந்தான ப்ரக்ரியைகளைப் பார்த்து அங்ஙனே அபிநயிப்பது தவிர வேறில்லைகாண். * சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையோ பெரிதால்* என்றும் *இடகிலேன் ஒன்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன் கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன்* என்றும், *அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயா ப்ரஸவபூ:* என்றுமுள்ள பூருவர்களின் பாசுரங்களைக்கண்டு 'நாமும் இங்ஙனே சொல்லிவைப்போம்' என்று அநுகரித்துச் சொல்லுமதொழிய வேறில்லையிறே. அந்த அநுகாரந்தானும் பிரானே! உன்னுடைய திருவுள்ளமுகக்கப்போதுமாயிற்று. எங்ஙனேயென்னில், ஸம்ஸாரிகளை வாரிப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போகக்கருதின நீ *[illegible]* என்கிறபடியே ஸம்ஸாரிகளைப்போலே பிறப்பதும் படாதன படுவதுமாய்க் காட்டிநிற்பது தானும் ஒரு அநுகாரந்தானே. ஆக அநுகாரம் இருவர்க்கும் ஒத்திருக்கையாலே 'நம்முடைய கூத்துக்குத் தகுதியாகவே இவனும் கூத்தடிக்கிறான்' என்று நீ உகந்திருக்க ப்ராப்தமேயன்றோ. ***सर्वस्सगन्धेषु** [illegible]* என்கிற ந்யாயத்தாலே நாடகரஸிகனான உனக்கு என்னுடைய நாடகமும் [illegible] குறைவில்லையென்றதாயிற்று. ... ... ... (43)

कर्तव्यमित्यनुकलं कलयाम्यकृत्यं स्वामिन्नकृत्यमिति कृत्यमपि त्यजामि ।
अन्यव्यतिक्रमणजातमनन्तमर्थस्थाने दया भवतु ते मयि सार्वभौमी ॥ ४४

கர்த்தவ்யமித்யநுகலம் கலயாம்யக்ருத்யம் ஸ்வாமிந் நக்ருத்யமிதி க்ருத்யமபி த்யஜாமி,
அந்யத் வ்யதிக்ரமண ஜாதமநந்தமர்த்தஸ்தாநே தயா பவது தே மயி ஸார்வபௌமீ. 44

ஹே ஸ்வாமிந்! அக்ருத்யம் கர்ம கர்த்தவ்யமிதி அநுகலம் கலயாமி; க்ருத்யம் அபி அக்ருத்யம் இதி த்யஜாமி; அந்யத் வ்யதிக்ரமணஜாதம் அநந்தம்; அர்த்தஸ்தாநே தயா மயி ஸார்வபௌமீ பவது

எம்பெருமானே! செய்யத்தகாத துஷ்கர்மத்தை செய்யத்தக்கதாக நினைத்து அடிக்கடி செய்துபோருகிறேன்; செய்யவேண்டியவற்றையோ அக்ருத்யமாக நினைத்து விட்டுவிடுகிறேன். மற்றுமுள்ள அபசாராதிகளோ எல்லையற்றவை; (ஆதலால்) உன்னுடைய திருவருளே பேறுபெறுத்தும் விஷயத்தில் என்பால் ஸம்ருத்தமாக விளங்கவேணும்.

*** ந்யாஸதசகத்தில் "அக்ருத்யாநாஞ்ச கரணம்! க்ருத்யாநாம் வர்ஜநஞ்ச மே; க்ஷமஸ்வ நிகிலம் தேவ! ப்ரணதார்த்திஹர ப்ரபோ!" என்றருளிச் செய்ததையே சிறிது விரிவாக அருளிச்செய்கிறாரிங்கு. சாஸ்த்ரங்களில் விதிவாக்கியங்களும், நிஷேத வாக்யங்களுமாக இரண்டு வகையுமுண்டே; அவற்றை மாறுபாடாக நடத்திப் போருகின்றேன். மறுக்கப்பட்ட அக்ருத்யங்களையெல்லாம் கர்த்தவ்யங்களைச் செய்வதுபோல் ச்ரத்தையோடு செய்கிறேன். விதிக்கப்பட்ட க்ருத்யங்களையெல்லாம் அக்ருத்யமாகவே நினைத்துவிடுகிறேன். இதுவன்றியும், பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாராதி ரூபங்களான அதிக்ரமங்களுக்கோ அளவு கிடையாது. இதைச் சொல்லியென்ன பயன்? தேவரீர் அகிஞ்சந விஷயத்தில் உபாயாந்தரஸ்தானத்திலே நின்று அருள் செய்யுமா போல அடியேன்திறத்தில் 'இவன் க்ருத்ய கரணத்திலும் அக்ருத்யவர்ஜனத்திலும் குறையற்றவன்' என்று திருவுள்ளத்திலே கொண்டு அவ்வாறு கருணையைச் செய்தருளவேணும் என்றூராயிற்று. "ஸார்வபௌமீபவது" என்றது செங்கோல் செலுத்தவேணுமென்றபடியாய் புஷ்கலமாக விளங்க வேணுமென்கை.

यं पूर्वमाश्रितजनेषु भवान्यथावद्धर्मं परं प्रणिजगौ स्वयमानृशंस्यम् ।
संसारितस्त्वमसि तस्य शरण्यभावान्नाथ! त्वदात्तसमया ननु मादृशार्थम् ॥ ४५

யம் பூர்வமாச்ரித ஜநேஷு பவாந் யதாவத் தர்மம் பரம் ப்ரணிஜகௌ ஸ்வயமாந்ருசம்ஸ்யம்
ஸம்ஸ்மாரிதஸ் த்வமஸி தஸ்ய ச்ரண்யபாவாத் நாத! த்வதாத்த ஸமயா நநு மாத்ருசார்த்தம். 45

ஹே நாத! பவாந் பூர்வம் ஆச்ரிதஜநேஷு ஆந்ருசம்ஸ்யம் யம் தர்மம் பரம் ஸ்வயம் யதாவத் ப்ரணிஜகௌ, தஸ்ய த்வம் ஸம்ஸ்மாரித: அஸி; சரண்யபாவாத் த்வத்ஆத்தஸமயா: மாத்ருசார்த்தம் நநு.

எம்பெருமானே! தேவரீர் முன்பு (இராமாவதாரத்தில்) ஆச்ரிதர்கள் விஷயத்தில் இரக்கத்தையே பரமதர்மமாகச் சொன்னபடியால் அதை நினைப்பூட்டுகிறேன்; சரண்யத்வோபயுக்தமாக தேவரீர்கொள்ளும் உறுதிகளெல்லாம் என்போலவார்க்காகவன்றோ?

*** ஸ்ரீராமாவதாரத்தில் பெருமாள் பிராட்டி பக்கலிலே "ஆந்ருஸம்ஸ்யம் பரோ தர்ம:" என்று அடிக்கடி உபந்யஸித்துக் கொண்டிருப்பாராம்; இது பிராட்டி திருவாக்கினால் வெளிவந்திருக்கின்றது. எங்ஙனேயென்னில், "ஆந்ருஸம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த ஏவ மயா ச்ருத:" என்று (ரா-ஸு. 38-41) திருவடிபக்கலிலே பிராட்டியெடுத்துரைப்பதனால் தெரியவருகின்றது. 'ஸதா இரக்கம் கொண்டிருப்பதுதான் பரம தர்மம்; இதற்கு மேற்பட்ட தருமமே கிடையாது' என்பது இதன்பொருள். இங்ஙனே சொன்னது பொதுவாக ஸர்வஜநவிஷயமேயன்றி பிராட்டிக்காக மட்டும் சொன்னதன்று; இதை நினைப்பூட்டும்முகத்தால் அடியேன்பால் இரக்கங்கொள்ள வேணுமென்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறார் இந்த ச்லோகத்தினால். ஸர்வேச்வரரான தேவரீர் என்போல்வாரான அடியார்களையும் திருவுள்ளத்திற்கொண்டுதானே அவ்வவதாரங்களில் ப்ரதிஜ்ஞைகள் செய்தருளியிருப்பது; கடற்கரையில் ஸ்ரீவிபீஷணாழ்வானை நோக்கிச் சொன்னதை, தேர்த்தட்டிலே அர்ஜுநனை நோக்கிச் சொன்னது முதலானவை அவரவர்களைமட்டும் நோக்கியதன்றே. ஆகவே ஸத்ய ப்ரதிஜ்ஞரான தேவரீர் அடியேன்பால் இரங்கியருளவே வேணும் என்று ப்ரார்த்தித்தாராகிறார்.

[தஸ்ய ஸம்ஸ்மாரித: த்வமஸி] இங்கு தஸ்ய என்கிற ஷஷ்டியானது கர்மத்தில் வந்தது. "**अधीगर्थदयेशां कर्मणि**" என்பது வியாகரணம். "அஸ்மார்ஷீத் ஜலநிதி மத்தநஸ்ய ஸௌரி:" இத்யாதி ப்ரயோகங்களும் காண்க. ... ... (45)

**त्राणं भवेति सकृदुक्तिसमुद्यतानां तैस्तैरसह्यवृजिनैरुदरंभरिस्ते ।**
**सत्यापिता शतमखात्मजशङ्करादौ नाथ! क्षमा न खलु जन्तुषु मद्विवर्जम् ॥** ४६

த்ராணம் பவேதி ஸக்ருதுக்தி ஸமுத்யதாநாம் தைஸ்தைரஸஹ்ய வ்ருஜிநைருதரம்பரிஸ் தே,
ஸத்யாபிதா ஸதமகாத்மஜ ஸங்கராதௌ நாத! க்ஷமா ந கலு ஜந்துஷு மத்விவர்ஜம். 46

| | |
|---|---|
| ஹே நாத! த்வம் த்ராணம் பவ இதி ஸக்ருது-உக்திஸமுத்யதாநாம் தை: தை: அஸஹ்யவ்ருஜிநை: உதரம்பரி: ஸதமகாத்மஜஸங்கராதௌ ஸத்யாபிதா தே க்ஷமா ஜந்துஷு மத்விவர்ஜம் ந கலு. | எம்பெருமானே! தேவரீரே ஸரணமாக வேணுமென்று ஒருகால் சொல்ல முயல்பவர்களினுடைய பல பல அஸஹ்யாபசாரங்களினால் வயிறு வளர்ப்பதும் காகம் சிவன் முதலானோரிடத்திலே மெய்ம்மைபெற்றதுமான தேவரீருடைய க்ஷமையானது ப்ராணிகளிடத்திலே (ப்ரஸரிக்கும்போது) என்னைத்தவிர்த்தன்றே. |

** ஆளவந்தார் "**मदेकवर्जं किमिदं व्रतं ते**" என்றருளிச் செய்ததை ஒருபுடையடியொற்றி யருளிச்செய்வதிது. த்ராணமென்றது ஸரணமென்றபடி. 'எனக்கு நீ ஸரணமாகக் கடவாய்' என்று அடிக்கடி சொல்லவேண்டா; ஒருகால் சொன்னாலே போதும்; சொல்லவேணுமென்கிற நிர்ப்பந்தந்தானுமில்லை; சொல்ல முயன்றாலே போதும்; அன்னவர்களின் அஸஹ்யாபசாரங்களைக் கொண்டு வயிறு வளர்க்கின்ற தேவரீருடைய க்ஷமையானது காகாஸுரன், பாணாஸுரனைக் காக்கவந்த சிவபெருமான் முதலானோர் பக்கலிலே ஸ்பஷ்டமாகக் காணப்பட்டதிறே. ஸர்வப்ராணிஸாதாரணமான அந்த க்ஷமைக்கு அடியேனொருவன் விலக்கோ? அங்ஙனேயொரு ஸங்கல்பமிருக்க ப்ராப்தியில்லையே யென்

கிறார். [ஶதமகாத்மஜ] இந்திரனுடைய புதல்வனான ஜயந்தனே காகமாக வடிவெடுத்து வந்தனாகப் புராணமாகையாலே ஶதமகாத்மஜனென்று காகத்தைச் சொல்லுகிறது. அவன் க்ஷமைக்கு இலக்கானது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். வாணனுயிர்த்தோள் துணித்தபோது சங்கரனிடத்திலே க்ஷமைகாட்டினது ஸ்ரீவிஷ்ணுபுராணாதி ப்ரஸித்தம். அல்லது, தந்தையின் தலையைக் கிள்ளியெறிந்து ஶாபோபஹதனை காலத்தில் வதரியிலே வந்துவணங்கியிருக்க, க்ஷமைகாட்டினதும் கொள்ளலாம். ஆதிஶப்தத்தாலே காளியன் சிசுபாலன் முதலானோரைக் கொள்வது. க்ஷமைக்கு [தைஸ்தைரஸஹ்யவ்ருஜிநைருதாஶம்ஸி:] என்று விஶேஷணமிட்டது ஶரணாகதர்களின் அபராதங்களினாலேயே க்ஷமை ஜீவிக்கின்றதென்று காட்டினபடி. ஶ்ரீகுணரத்நகோசத்திலும் *मयि तिष्ठति दुष्कृतां प्रधाने मितदोषानितरान् विचिन्वती त्वम् । अपराधशतैरपूर्णकुक्षिः कमलाकान्तदये ! कथं भवित्री ॥* என்றருளிச்செய்ததை இங்கே ஸ்மரிப்பது. "க்ஷமை ஸாவபௌமர்க்கு" என்கிற ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். (46)

कर्मादिषु त्रिषु कथां कथमप्यजानन्कामादि(मांसल)मेदुरतया कलुषप्रवृत्तिः ।
साकेतसंभवचराचरजन्तुनीत्या वीक्ष्यः प्रभो ! विषयवासितयाऽप्यहं ते ॥ ४७

கர்மாதிஷு த்ரிஷு கதாம் கதமப்யஜாநந் காமாதி மேதுரதயா கலுஷ ப்ரவ்ருத்தி:,
ஸாகேத ஸம்பவ சராசர ஜந்து நீத்யா வீக்ஷ்ய: ப்ரபோ! விஷய வாஸிதயாऽப்யஹம் தே. 47

ஹே ப்ரபோ! கர்மாதிஷு த்ரிஷு கதாம் கதமபி அஜாநந் காமாதி மேதுரதயா கலுஷ ப்ரவ்ருத்தி: அஹம் ஸாகேத ஸம்பவ சராசர ஜந்து நீத்யா விஷயவாஸிதயாபி வீக்ஷ்ய: } எம்பெருமானே! கர்மஜ்ஞாநபக்திகள் மூன்றிலும் ப்ரஸக்திலேஶமுமற்றவனும், காமக்ரோதாதிகள் நிரம்பியிருப்பதனால் துஷ்டப்ரவ்ருத்தியையுடையனுமிருக்கிற அடியேன் * கற்பாரயோத்தியில் வாழும் சராசரங்களைக்கிலே தேஶவாஸித்வத்தையிட்டும் கடாக்ஷிக்கத் தகுந்தவனாகிறேன்.

*** சக்ரவர்த்தியின் கட்டளைப்படி ஸுமந்திரர் பெருமாளையும் இளையபெருமாளையும் பிராட்டியையும் தேரிலேற்றிக் கொண்டுபோய் ச்ருங்கிபேரபுரத்தில் விட்டுவிட்டுத் திரும்புகையில் வழியில்கண்ட அற்புதமான காட்சியை சக்ரவர்த்தி பக்கலிலே விண்ணப்பஞ் செய்கிறார்—"விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸந கர்ஶிதா:, அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா:, உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச, பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச* என்று. கூரத்தாழ்வானும் அதிமாநுஷ ஸ்தவத்தில் "வ்ருக்ஷாச் ச தாந்திமலபந்த பவத்வியோகே" என்றருளிச் செய்தார். அசேதநவஸ்துக்களுக்குச் சேதநவஸ்துக்களுக்குப் போலே அன்பு விளைந்ததற்கு ஏது காரணமென்னில், ஸுமந்த்ரர் சொல்லத் தொடங்கும்போது "விஷயே தே" என்று ஆரம்பிக்கையாலும், மேலே தண்டகாரண்யவாஸிகளான மஹரிஷிகள் சொல்லும் போதும் "தே வயம் பவதா ரக்ஷ்யா பவத் விஷயவாஸிந:" என்று சொல்லுகையாலும் தேஶவாஸித்வமே பற்றாசாகக் கொண்டமை காட்டப்பட்டது. இங்கு இதைப் புரஸ்கரித்து ஆசிரியர் அருளிச் செய்கிறார் "விஷயவாஸிதயா வீக்ஷ்ய:" என்று. 'விஷயவாஸிதயாபி' என்கிற அபிஶப்தத்தினால் மேலே ஆஸ்தாபித்த பூர்வாசார்ய ஸூக்தி விடம்பநாதிகள் ஸமுச்சயிக்கப்படுகிறன. "ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாந் த்வச்சரணாரவிந்தே" என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திப்படியே முதல் பாதம் பணித்தபடி. இரண்டாம் பாதத்தில் 'காமாதி மாம்ஸலதயா" என்றும் பாடமுண்டு.

அதாவது, பஞ்சஸம்ஸ்கார காலத்தில் விளைந்த மந்த்ர ஸம்ஸ்காரத்தில் த்வயோச்சாரணாநூச்சாரண ரூபமான ப்ரவ்ருத்தி. ஸ்ரீரஹஸ்யத்ரயஸார க்ருதக்ருத்யாதிகாரத்தில் "ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு ஶரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே" என்றருளிச் செய்தபடி ஆசார்யஸாபேக்ஷமாக ஸித்தித்த உபாயம் இதுவேயாயிற்று. அதுவும் கிடக்கட்டும்; *ந தர்ம நிஷ்டோஸ்மி* அபராத ஸஹஸ்ரபாஜநம் * அகலகில்லேனிறையுமென்று" இத்யாதிகளான ஆழ்வாராசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளைச் சொல்லிக்கொண்டிருப்பதனாலே ஸித்திக்கிற ஆபத்தியும் கிடக்கட்டும். [த்வதேவகதிதார்த்தா] உக்தியின் பொருளை அதனை வடியேன் அறிந்திலேனாகிலும் ஸர்வஜ்ஞனை நீ அறியக் குறையில்லாமையாலே இது கார்யகரமாகத் தட்டில்லை. இதுவும் கிடக்கட்டும். [பூர்வபுருஷை: த்வயி ந்யஸ்தஸ்ய மே] இங்கே பூர்வபுருஷர்களென்கிறது ஸ்ரீபாஷ்யகாரரான எம்பெருமானாரை. ந்யாஸதிலகத்தில் "உக்த்யா தநஞ்ஜய" இத்யாதி ச்லோகத்தில் "லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம் ச்ருத்வா வரம்" என்றருளிச் செய்ததையும் அங்கே பூர்வர்களின் வியாக்கியானத்தில் விவரித்த ஸம்ஸ்காரத்தையும் இங்கே அநுஸந்திப்பது. ஸ்ரீபாஷ்ய—மங்களச்லோகத்தில் "விநதவிவித பூத வ்ராத ரக்ஷைகதீக்ஷே" என்றவிடத்தில் [illegible] உபபாதிக்கின்ற ச்ருத ப்ரகாசிகையும் தத்வடீகையும் குறிக்கொள்ளத்தக்கவை. பூர்ணோ என்கிற விசேஷணத்தினால் ஒன்றையும் எதிர்பாராமலே காரியஞ்செய்யவல்ல பூர்த்தியையுடையீரன்றோ தேவரீர் என்று காட்டினபடி. [ஏஷ உபாய: புநருக்த:] இப்போது இந்த ஸ்தோத்ரமுகேந அநுஸந்திக்கிற ந்யாஸரூபமான உபாயம் மிகையாகச் செய்யப்பட்டதத்தனை. இது அத்யந்த அகிஞ்சித்கரமென்றபடி. .... .... ... ... (49)

यद्वा मदर्थपरिचिन्तनया तवालं संज्ञां प्रपन्न इति साहसिको बिभर्मि ।
एवं स्थिते त्वदपवादनिवृत्तये मां पात्रं कुरुष्व भगवन्भवतः कृपायाः ॥ ५०

யத்வா மதர்த்தபரிசிந்தநயா தவாலம் ஸம்ஜ்ஞாம் ப்ரபந்ந இதி ஸாஹஸிகோ பிபர்மி,
ஏவம் ஸ்திதே த்வதபவாதநிவ்ருத்தயே மாம் பாத்ரம் குருஷ்வ பகவந்! பவத: க்ருபாயா:. 50

| | |
|---|---|
| ஹே பகவந்! யத்வா மதர்த்தபரிசிந்தநயா தவ அலம்; ப்ரபந்ந: இதி ஸம்ஜ்ஞாம் ஸாஹஸிகஸ் (ஸந்) பிபர்மி; ஏவம் ஸ்திதே த்வத் அபவாத நிவ்ருத்தயே மாம் பவத: க்ருபாயா: பாத்ரம் குருஷ்வ. | எம்பெருமானே! பலசொல்லியென்? என் பக்கலில் என்ன என்ன கைம்முதலுள்ளதென்கிற ஆராய்ச்சி தேவரீருக்கு வேண்டா; ப்ரபந்நனென்கிற பெயரை நான் துணிந்து சுமக்கிறேன். இப்படியிருந்தும் ப்ரபந்ந பரித்யாகியென்கிற அபவாதம் தேவரீருக்கு விளையாமைக்காக அடியேனை அருளுக்கு இலக்காக்கிக் கொள்ள வேணும். |

* * * ச்லோகம் தொடங்கும்போதே யத்வா என்றது இதை விசேஷித்துக் குறிக்கொண்டருளவேணுமென்கிற தாத்பர்யத்தினாலே. * நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேனென்றுப்போலே ஆகிஞ்சந்யமே வடிவெடுத்திருக்கிற அடியேன் பக்கலிலே ஒருகைம்முதலுமில்லை யென்பது வ்யக்தமாயிருக்க, என்னகைம்முதலுள்ளதென்று தேவரீர் ஆராய்ச்சி செய்வது எதற்காக? அந்த வ்யர்த்த சிந்தை வேண்டா. அடியேனுக்கு முக்கியமாக நன்

றுளது; அதாவது ஶரணாகதனென்ற பெயர் பெற்றிருக்கை. ப்ராஹ்மணகுலத்திலே பிறந்தவனுக்கு ப்ராஹ்மணனென்ற ஸம்ஜ்ஞையாகிறப்போலே ப்ரபந்ந குலத்திலே பிறந்தவனக்கு ப்ரபந்ந ஸம்ஜ்ஞைக்குக் குறையில்லையிறே. தேவரீருடைய திருவுள்ளத்துக்கு இத்தனையே போதுமிறே. ப்ரபந்ந ரக்ஷக ப்ருதுபெற்ற தேவரீர் இந்த ப்ரபந்நனைப் பரித்யஜிக்குமளவில் அபவாதம் விளையுமென்பதை மறந்துவைத்து ரக்ஷியாதொழிவது கூடாது. ஆகவே அடியேனைத் திருவுள்ளத்துக்கு இலக்காக்கியே தீரவேணுமென்றாராயிற்று. ... (50)

त्यागे गुणेश! शरणागतसंज्ञिनो मे स्यादागसोऽपि सहसैव परिग्रहे वा ।
किं नाम कुत्र भवतीति कृपादिभिस्ते गूढं विचारय गुणेतरतारतम्यम् ॥ ५१

த்யாகே குணேஶ! ஶரணாகதஸம்ஜ்ஞிநோ மே ஸ்யாதாகஸோபி ஸஹஸைவ பரிக்ரஹே வா,
கிம் நாம குத்ர பவதீதி க்ருபாதிபிஸ் தே கூடம் விசாரய குணேதரதாரதம்யம். 51

ஹே குணேஶ! ஶரணாகதஸம்ஜ்ஞிந: மே த்யாகே வா, ஸ்யாத ஆகஸோபி மே ஸஹஸைவ பரிக்ரஹே வா குத்ர கிம் நாம பவதி இதி தே க்ருபாதிபிஸ் ஸஹ குண இதர தாரதம்யம் கூடம் விசாரய. — வாரீர் குணநிதியான பெருமானே! ப்ரபந்நனென்கிற பெயரைச்சுமக்குமென்னை விடுவதோ, மஹாபராதியாயிருக்கச்செய்தேயும் அடியேனைக் கடுகப் பரிக்ரஹிப்பதோ ஆகிய இவையிரண்டில் எதுசெய்தால் எது சேருமென்கிற குணகுண தாரதம்யத்தை தேவரீருடைய க்ருபைமுதலான குணங்களோடு கூடி ஏகாந்தமாக விசாரித்தருளவேணும்.

* * * இது வெகு சாதுர்யமாக விண்ணப்பம் செய்கிறபடி. அடியேனைப் பரித்யஜிப்பதற்கும் பரிக்ரஹிப்பதற்கும் உரியகாரணங்களுண்டு. இவன் குற்றம் நிரம்பியவன் என்று இதைப்பார்த்தால் பரித்யஜிக்கவே ப்ராப்தம். இவன் ப்ரபந்நகுலத்திற் பிறந்தவன் என்று இதைப்பார்த்தால் பரிக்ரஹிக்கவே ப்ராப்தம். ஆனால் இதில் விபர்யாஸமுமாகலாம். எங்ஙனே யென்னில், இவன் நாமதாரி ப்ரபந்நனேயாகையாலே இவன் பரிக்ராஹ்யனல்லன், பரித்யாஜ்யனேயாவன் என்று திருவுள்ளம்பற்றலாம்; இவன் பரிபூர்ணபராதனாகையாலே "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" என்று சொல்லியிருக்கிற நமக்கு இப்படிப்பட்ட துஷ்டாதிகாரியைப் பரிக்ரஹிப்பதே நன்று என்று திருவுள்ளம்பற்றலாம். ஆக அடியேன்பால் பரித்யாஜ்யதைக்கும் பரிக்ராஹ்யதைக்கும் விஷயமுண்டு; எதுசெய்வதிலும் தேவரீர் ஸ்வதந்த்ரர். ஆனாலும் அடியேன் விண்ணப்பம் செய்வதொன்றே; இவனைப் பரிக்ரஹிப்பது நன்றா? பரித்யஜிப்பது நன்றா? என்பதை தேவரீர் தனியாக விசாரித்து முடிவுசெய்வதிற்காட்டிலும் தயாவாத்ஸல்யாதி கல்யாணகுணங்களோடுங் கூடி விசாரித்தல் நன்று—என்கிறார். அங்ஙனே விசாரிக்குமளவில் அந்தத் திருக்குணங்கள் தாம் ஜீவிக்கவேண்டி பரித்யாகபக்ஷத்தைக் கண்டித்துப் பரிக்ரஹ பக்ஷத்தையே நிலைநாட்டுமென்று திருவுள்ளம். தயாவாத்ஸல்யாதி குணங்களைப் பழுதுபடுத்தாமல் அந்த திருக்குணங்கள் ஸார்த்தகமாம்படி அடியேனைப் பரிக்ரஹித்தருளவேணுமென்றாராயிற்று. [இதி விசாரய] பரித்யஜித்தால் என்னாகும்? பரிக்ரஹித்தால் என்னாகும்? என்று ஆலோசித்துப் பார்க்கவேணுமென்கை. "பரித்யஜித்தால் குணஹாநி விளையும்; பரிக்ரஹித்தால் குணஸம்ருத்தி விளையுமென்று விசாரணையில் தேறுமென்பதை குணேதரதாரதம்யமென்பதனால் வெளியிட்டபடி.

स्वामी दयाजलनिधिर्मधुरः क्षमावान् शीलाधिकः श्रितवशः शुचिरस्युदारः ।
एतानि हातुमनघो न किलार्हसि त्वं विख्यातिमन्ति विरुदानि मया सहैव ॥ ५२

ஸ்வாமீ தயாஜலநிதிர் மதுர: க்ஷமாவாந் ஶீலாதிக: ச்ரிதவச: சுசிரஸ்யுதார:,
ஏதாநி ஹாதுமநகோ ந கிலார்ஹஸி த்வம் விக்க்யாதிமந்தி விருதாநி மயா ஸஹைவ. 52

அநக: த்வம் ஸ்வாமீ தயாஜலநிதி: மதுர: க்ஷமாவாந் ஶீலாதிக: ச்ரிதவஶ: சுசி: அத்யுதார: (இதி) ஏதாநி விக்க்யாதிமந்தி விருதாநி மயா ஸஹ ஏவ ஹாதும் த்வம் ந அர்ஹஸி.

எம்பெருமானே! அகிலஹேய ப்ரத்யநீகரான தேவரீர் ஸ்வாமியென்றும் கருணைக்கடலென்றும் இனிமையே வடிவெடுத்தவரென்றும் பொறுமையுள்ளவரென்றும் ஸௌசீல்ய நிதியென்றும் ஆச்ரிதவச்யரென்றும் பரிசுத்தரென்றும் பெருவள்ளலென்றும் ப்ரஸித்திபெற்ற விருதுகளையும் அடியேனையும் விடக்கடவீரல்லீர்.

*** கீழ்ச்லோகத்தில் [க்ருபாதிபி: ஸஹ கடம் விசாரய] என்றாரே; அதில் ஆதிபதக்ராஹ்யங்களான குணவிசேஷங்களைத் தாமே விவரித்து, இந்த குணங்களை விடுவதானால் அடியேனை விடலாம்; ஸ்வரூபாநுபந்திகளான இந்த குணங்களும் விடமுடியாதவை, அடியேனும் விடமுடியாதவன் என்று நிகமிக்கிறார். [ஸ்வாமீ] உடையவன் உடைமையை விடலாகுமோ? [தயாஜலநிதி:] கருணைக்கடலாயிருப்பவன் நிர்க்ருணர் செய்வது செய்யலாமோ? என்றபடி. [மதுர:] * தேனே பாலே கன்னலேயமுதே யென்னும்படியிருப்பவன் அந்த மாதுர்யத்தைக் காட்டிலெறித்த நிலாவாக ஆக்கலாமோ? [க்ஷமாவாந்] க்ஷமைக்கு இரைதேடிக்கொடுக்க வேண்டியதன்றோ உன் பணி. [சீலாதிக:] ஸௌசீல்யம் என்னைவிட்டால் ஜீவிக்குமோ? [ச்ரிதவச:] ஆச்ரிதபாரதந்த்ரனென்றும் பக்தபராதீனனென்றும் பெயர் சுமப்பது வெறுமனேயோ? [சுசி:] கைம்மாறு கருதாமல் உபகரித்தலாகிற தூய்மைக்குக் கொத்தை விளையலாமோ? [அத்யுதார:] * எனக்கே தன்னைத் தந்த கற்பகம் * என்று தன்னுடைமையையுங்கொடுத்துத் தன்னையுங்கொடுக்கும் வள்ளல்தனத்திற்குப் பொருந்துமோ? என்று இங்ஙனே பல கேள்விகள் கேட்கிறபடி. ... ... ... (52)

वेलाधनञ्जयरथादिषु वाचिकैः स्वैराघोषितामखिल(लोक)जन्तुशरण्यतां ते ।
जानन् दशाननशतादधिकागसोऽपि पश्यामि दत्तमभयं स्वकृते त्वया मे ॥ ५३

வேலாதநஞ்ஜயரதாதிஷு வாசிகை: ஸ்வைர் ஆகோஷிதாம் அகிலஜந்து ஶரண்யதாம் தே,
ஜாநந் தஶாநநஶதாத் அதிகாகஸோபி பச்யாமி தத்தமபயம் ஸ்வக்ருதே த்வயா மே:. 53

வேலா தநஞ்ஜயரத ஆதிஷு ஸ்வை: வாசிகை: ஆகோஷிதாம் தே அகில ஜந்து சரண்யதாம் ஜாநந் (அஹம்) தசாநநசதாத் அதிக ஆகஸ: அபி மே ஸ்வக்ருதே த்வயா அபயம் தத்தம் பச்யாமி.

எம்பெருமானே! கடற்கரை, அர்ஜுநனது தேர்த்தட்டு முதலான இடங்களில் தனது திருவாக்குகளாலே கோஷிக்கப்பட்ட உன்னுடைய ஸர்வலோக சரண்யத்வத்தை யறிந்த அடியேன், நூறு ராவணர்களிற் காட்டிலும் மிக்க அபராதியாயிருக்குமெனக்கும் ஸ்வார்த்தமாக நீ அபயமளித்ததாகக் காண்கிறேன்.

मुख्यं च यत्प्रपदनं स्वयमेव साध्यं दातव्यमीश! कृपया तदपि त्वयैव ।
तन्मे भवच्चरणसङ्गवतीमवस्थां पश्यन्नुपायफलयोरुचितं विधेयाः ॥ ५५

முக்யஞ் ச யத் ப்ரபதநம் ஸ்வயமேவ ஸாத்யம் தாதவ்ய மீஶ க்ருபயா ததபி த்வயைவ,
தந்மே பவச்சரணஸங்கவதீமவஸ்தாம் பஶ்யந்நுபாயபலயோருசிதம் விதேயா:. 55

| | |
|---|---|
| ஹே ஈச! ஸ்வயம் ஏவ ஸாத்யம் யத் முக்யம் ப்ரபதநம் தத் அபி த்வயா ஏவ க்ருபயா தாதவ்யம்; தத் பவச்சரண ஸங்கவதீம் மே அவஸ்தாம் பச்யந் உபாய பலயோ: உசிதம் விதேயா:. | எம்பெருமானே! தானே ஸாதித்துக்கொள்ளத் தக்கதாக யாதொரு முக்கியமான ப்ரபத்தியுண்டோ, அதுவும் தேவரீராலேயே கருணையினால் கொடுத்தருளத்தக்கது. ஆகவே தேவரீருடைய திருவடிகளைப் பொருந்தியே யாகவேணுமென்றிருக்கிற எனது நிலைமையை நோக்கி உபாயம் பலன் என்னுமிரண்டினுள் எது உசிதமோ அது தன்னைத் தந்தருளவேணும். |

*** எம்பெருமான் நமக்குக் கரணகளேபர ப்ரதானம்பண்ணியிருப்பது அவற்றைக்கொண்டு நாமாக முயன்று வழிபாடு செய்வதற்காகத்தானே; அங்ஙனம் ஸாதிக்கப்படும் உபாயமன்றோ ஸாத்யோபாயமெனப்படுவது. அது இல்லையாகில் எம்பெருமான் அருள் செய்வது அரிதேயன்றோ? என்று ஆலோசித்த ஆசிரியர், "அதுவுமவனதின்னருளே" என்று ஆழ்வாருளிச்செய்தபடியே அதுவும் அவனருளால் ஸித்திக்கவேண்டியதேயன்றோ; நாம் முயன்று ஸாதிப்பதென்று ஒன்றுண்டோ? "எனதாவியார் யானார் தந்தநீ கொண்டாக்கினையே" என்று ஆழ்வாரும், * மமநாத யதஸ்தீத்யாதியாக ஆளவந்தாருமருளிச்செய்தபடியே நாம் செய்வதென்றும் நாம் ஸமர்ப்பிப்பதென்றும் ஒன்றில்லாமையாலே எதத்ஸித்திக்கும் அவனதின்னருளையே ப்ரார்த்திக்குமத்தனையேயென்று துணிந்து "தாதவ்யமீஶ! க்ருபயா ததபி த்வயைவ" என்பதை உயிராகவைத்து இந்தச்லோகமருளிச்செய்கிறார். அடியேன் ஸித்தோபாயாதிகாரியேயொழிய ஸாத்யோபாயாதிகாரியல்லேன்; ஸாத்யோபாயம் அவசியம் வேணுமென்று திருவுள்ளமாகில் அதை தேவரீரே ஸாதித்துக்கொடுக்குமத்தனையல்லது "என்னான் செய்கேன்" என்றிருக்குமடியேனால் ஸாதிக்கப்படுவதொன்றில்லையென்று அருளிச்செய்தாராயிற்று. [உபாய பலயோ: உசிதம் விதேயா:] கீழ் நாற்பத்தெட்டாம் ச்லோகத்தில் விண்ணப்பம் செய்தபடி அடியேனை க்ருதக்ருத்யனாகத் திருவுள்ளம் பற்றுமளவில் பலனைப் பெறுவித்தருள்வது ப்ராப்தம்; இன்னும் க்ருதக்ருத்யனல்லேனென்று திருவுள்ளமாகில் உபாயநிஷ்பத்தியை தேவரீர் தாம் செய்துகொடுக்க ப்ராப்தம்; இவ்விரண்டினுள் எதுவானாலும் அடியேனுக்கு அநிஷ்டமன்று. அடியேனுக்கு உத்தேச்யம் பலன். அதை அத்வாரகமாகக் கொடுப்பதோ ஸத்வாரகமாகக் கொடுப்பதோ தேவரீர் திருவுள்ளப்படியாகுக—என்றாராயிற்று. 'உபாயபலயோர் மத்யே யத் உசிதம் தத் விதேயா:' என்கை. ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * நிர்ப்பந்த லக்ஷ யதி தே * என்றருளிய அந்திம ச்லோகத்தை யடியொற்றி யருளிச் செய்தது இந்த ச்லோகம். .... ... (55)

अल्पास्थिरैरसुकरैरसुखावसानैर्दुःखान्वितैरनुचितैरभिमानमूलैः ।
प्रत्यक्परागनुभवैः परिघूर्णितं मां त्वय्येव नाथ! चरितार्थय (निर्व्यपेक्षम्) निर्विविक्षुम् ॥ ५६

அல்பாஸ்திரைரஸுகரைரஸுகாவஸாநை: து:க்காந்விதைரநுசிதைரபிமாநமூலை:,
ப்ரத்யக்பராகநுபவை: பரிகூர்ணிதம் மாம் த்வய்யேவ நாத! சரிதார்த்தய நிர்விவிக்ஷும். 56

ஹே நாத! அல்ப அந்திரா: அஸாரதரா: அனாரதவனா: தாபகாக்ஷிதா: அஸ்திரா: அபிமானமூலா: ப்ரத்யக் பராக் அநுபவா: பரிகூர்ணிதம் த்வயி ஏவ நிர்விஷ்டாம் மாம் சரிதார்த்தய.

எம்பெருமானே! அற்பங்களும் நிலையில்லாதனவும் விரும்பிச் செய்யமுடியாதனவும் துக்கத்திலே முடிந்து நிற்பனவும் துக்கங்களோடு கூடியனவும் ஸ்வருபவிருத்தங்களும் தேஹாத்மப்ரமம் முதலிய அபிமானங்களின் விளைவுமான கைவல்ய போக ஸ்வர்கபோகங்களாலே வ்யாகுலசித்தனாய் உன் பக்கலிலேயே பேரின்பமநுபவிக்க விரும்பியிருப்பவனான என்னை க்ருதார்த்தனாக்கியருளவேணும்.

* * * ஆமுஷ்மிக பலன்களில் ஸ்வர்கானுபவம், கைவல்யானுபவம், ஸ்ரீவைகுண்டானுபவம் என்று மூவகைப்பட்ட அநுபவங்கள் ஸாஸ்த்ரஸித்தம். ஸ்வர்ககைவல்யாநுபவங்களில் பலவகைக் குறைகள் ஸ்பஷ்டமாகத் தோன்றினதும் அவற்றிலே விருப்பம் விழுவது பன்னமடை; அடியேனும் அவற்றிலே சபலனாய்த் தளும்பி நிற்கின்றேன். ஆனாலும் * கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலுமைங்கருவி கண்டவின்பம், தெரிவரியவளவில்லாச் சிற்றின்பம், ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர்கண்டு ஒழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே" என்பது முதலான திவ்யஸூக்திகளை யநுஸந்திக்குமிடத்து அவற்றிலே விருப்பம் தலைமடிந்து நிற்கின்றது. தோஷதர்சனங்களாலும் அவற்றிலே அருசி விளைகின்றது. பேரின்பவெள்ளமான தேவரீருடைய திவ்யாநுபவத்தில்தான் அபிருசி செல்லுகின்றது. இவ்வபிருசியைத் தலைக்கட்டியருளவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. கீழ்ச்லோகத்தளவும் உபாயத்தில் கலையறுத்து இந்த ச்லோகத்தினால் உபேயத்தில் கலையறுத்தாரென்று தெளியக்கடவது. [ப்ரத்யக்பராகநுபவா:] ப்ரத்யகநுபவமாவது ஆத்மாநுபவமெனப்படுகிற கைவல்யாநுபவம்; பராகநுபவமாவது—ஐஹிகபோகங்களும் ஸ்வர்காதி போகங்களும். இவற்றால் பரிகூர்ணிதமென்றது இதையநுபவிப்போமா? அதையநுபவிப்போமாவென்று மனஞ்சுழலுகிறபடியைச் சொன்னவாறு. ... ... (56)

तत्त्वाववोधशमितप्रतिकूलवृत्तिं कैङ्कर्यलब्धकरणत्रयसामरस्यम् ।
कृत्वा त्वदन्यविमुखं कृपया स्वयं मां स्फातिं दृशोः प्रतिलभस्व जगज्जनन्याः ॥ ५७

தத்வாவபோதஶமிதப்ரதிகூலவ்ருத்திம் கைங்கர்யலப்தகாரணத்ரயஸாமரஸ்யம்.
க்ருத்வா த்வதந்யவிமுகம் க்ருபயா ஸ்வயம் மாம் ஸ்பாதிம் த்ருஶோ: ப்ரதிலபஸ்வ ஜகஜ்ஜநந்யா:.57

மாம் தத்வாவபோதஶமிதப்ரதிகூலவ்ருத்திம் கைங்கர்யலப்தகாரணத்ரயஸாமரஸ்யம் த்வத் அந்யவிமுகம் ச ஸ்வயம் க்ருபயா க்ருத்வா ஜகஜ்ஜநந்யா: த்ருஶோ: ஸ்பாதிம் ப்ரதிலபஸ்வ.

(எம்பெருமானே!,) அடியேனை தத்வஜ்ஞானத்தாலே ப்ரதிகூலவ்ருத்திகள் தொலையப் பெற்றவனாகவும் கைங்கர்ய விசேஷங்களினாலேமனோவாக்காயங்களின் ஸாமரஸ்யம் பெற்றவனாயும் உன்னையொழிந்த விஷயங்களில் விமுகனாயும் இயற்கையின்னருளாலே செய்தருளி பெரிய பிராட்டியாருடைய திருக்கண் மலர்ச்சியைப் பெறுவாயாக.

* * * அடியேனுடைய ப்ரார்த்தனையைத் தலைக்கட்டுபவனேயென்று உத்தேச்யம்; அடியேனை அங்கீகரித்தருள்வதனால் பெரிய பிராட்டியாருடைய திருமுகமலர்ச்சியையும்

தேவரீர் காணப்பெறலாமென்று விண்ணப்பம் செய்கிறாரிதில். ஸதாசார்யஸேவையினாலே தத்வஜ்ஞானமுண்டாகி அதனாலே ப்ரதிகூல வ்ருத்திகள் தொலையும்படி செய்தருளவேணும், கைங்கரியத்திலே மூட்டி, மனோவாக்காயங்களாகிற த்ரிகரணங்களையும் ஒருமிக்கச் செய் தருளவேணும். * உன்னாலல்லால் யாவராலுமொன்றுங் குறைவேண்டேன் * என்கிற படியே தேவரீரையொழிந்த உபாயோபேயாந்தரங்களில் வைமுக்யத்தை விளைத்தருள வேணும். இத்தனையும் செய்யுமிடத்து ஸ்வாபாவிக க்ருபையினாலே செய்தருளவேணும். இவை எனக்குச் செய்ததாகவன்றிக்கே பிராட்டியின் திருவுள்ள வுகப்புக்குச் செய்ததாக வேணும். "நம்முடைய புருஷகாரக்ருத்யம் பலித்தபடியென்!" என்று அவள் உகக்க, அவ் வுகப்புத்தானே தேவரீருக்குப் புருஷார்த்தமாகவேணுமென்கை. (ஊதிலபல்வ) என்கிற க்ரியையினாலே அதுதான் தேவரீருக்குப் பரமலாபமென்று காட்டினபடி. ஸௌநியாவது மலர்ச்சி. ஒரு சேதநனை அங்கீகரியாது விட்டவாறே பிராட்டி எம்பெருமானைக் கண்ணை டுத்தும் பாரான் என்பது இதனால் ஸூசிதமாகும். .... .... (57)

इत्थं स्तुतिप्रभृतयो यदि संमताः स्युर्यद्वाऽपराधपदवीष्वभिसंविशन्ति ।
स्तोकानुकूल्यकणिकावशवर्तिनस्ते प्रीतिक्षमाप्रसरयोरहमस्मि लक्ष्यम् ॥ ௫௮

இத்தம் ஸ்துதிப்ரப்ருதயோ யதி ஸம்மதாஸ் ஸ்யு: யத்வாऽபராதபதவீஷ்வபிஸம்விஶந்தி,
ஸ்தோகாநுகூல்யகணிகாவஶவர்த்திநஸ் தே ப்ரீதிக்ஷமாப்ரஸரயோரஹமஸ்மி லக்ஷ்யம். 58

| | |
|---|---|
| இத்தம் ஸ்துதிப்ரப்ருதய: ஸம்மதாஸ் ஸ்யு: யதி, யத்வா அபராதபதவீஷு அபிஸம்விஶந்தி, ஸ்தோகாநுகூல்ய கணிகாவஶவர்த்திந: தே ப்ரீதி க்ஷமாப்ரஸரயோ: அஹம் லக்ஷ்யம் அஸ்மி. | (எம்பெருமானே!) அடியேன் இங்ஙனே ஸ்துதிநமஸ்காராதிகளைச் செய்வது தேவரீருக்கு அபிமதமாகில் ஸ்வல்ப ஆநுகூல்யத்தளவிலே வசப்படுகின்ற தேவரீர்க்கு ப்ரீதி லக்ஷ்யமாகிறேன்; இவை தேவரீருக்கு அநபிமதமாகில் க்ஷமைக்கு லக்ஷ்யமாகிறேன். (ஒருவழியிலும் ஒரு குறையுமில்லை.) |

* * * எம்பெருமான் விஷயத்திலே நாம் செய்யும் வழிபாடுகள் ஸ்வரூபாநுரூபங்களாகையாலே அவனும் இவற்றை ஸ்வரூபாநுரூபமேயென்று திருவுள்ளம்பற்றி உகந்தருள்வனாகில் அவனுடைய ப்ரீதிக்கு நாம் இலக்காகும்படியாயிருக்கும்; ஸர்வப்ரகாரத்தாலும் நமக்குள்ள நிஹீநதையை நினைக்குங்கால் "த்வத்கிங்கரத்வமபவே ஸ்ப்ருஹயாபராத்யம்" என்று கீழே ஆசிரியர்தாமே அருளிச்செய்தபடி இவை அபராதகோடியிலே பரிகணநீயமாகும். எம்பெருமான் திருவுள்ளத்தாலே இவை உபசாரகோடியிலாகிறதோ, அபசார கோடியிலாகிறதோ என்பது அறுதியிடவொண்ணாததாகையாலே உபசாரமாகத் திருவுள்ளம் பற்றினால் ப்ரீதிக்கு இலக்காகிறோம், அபசாரமாகத் திருவுள்ளம் பற்றினால் க்ஷமித்தருளவேணுமென்று வேண்டி க்ஷமாகுணத்திற்கு இலக்காகிறோம். இரண்டுபடியும் உத்தேச்யமேயென்று ஸமாஹிதராய்த் தலைக்கட்டுகிறார். [ஸ்தோகாநுகூல்யகணிகாவசவர்த்திநஸ் தே] என்றது ப்ரீதிக்கும் க்ஷமைக்கும் பொதுவாகச் சொன்னபடி. அடியார்கள் பக்கலிலே ஆநுகூல்யலவலேஶத்தையே எதிர்பார்த்திருக்கின்ற தேவரீருக்கு ப்ரீதிஹேதுவாவதும் க்ஷமாஹேதுவாவதும் நிர்விஶேஷமேயென்று கருத்து. ... ... ... (58)

काञ्चीवादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यरचितैषा ।
दीपप्रकाशभगवत्स्तुतिविवृतिर्विबुधहर्षणी जीयात् ॥
शरणागतिसारदीपिकाख्या विवृतिस्स्येयमनर्घभावगर्भा ।
कवितार्किकसिंहसूरिचित्ते परमं विस्मयमादधीत सत्यम् ॥

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने । श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥

### இதுகாறும் வெளிவந்த தேசிக ஸ்தோத்ர வியாக்கியானங்கள்.

1. ஹயக்ரீவஸ்தோத்ரம்.
2. பரமார்த்தஸ்துதி.
3. கோதாஸ்துதி.
4. ந்யாஸதசகம்.
5. வைராக்யபஞ்சகம். (தேசிகமங்களம்.)
6. பகவத்த்யாநஸோபானம்.
7. தசாவதாரஸ்தோத்ரம்.
8. யதோக்தகாரி ஸ்தோத்ரம்.
9. அஷ்டபுஜாஷ்டகம்.
10. காமாஸிகாஷ்டகம்.
11. சரணாகதி தீபிகை என்கிற தீபப்ரகாச ஸ்தோத்ரம்.

### விரைவில் வெளிவரவிருக்கும் ஸ்தோத்ரங்கள்.

வரதராஜபஞ்சாசத்.
யதிராஜஸப்ததி.
ஸ்ரீஸ்துதி.
கோபாலவிம்சதி.
அபீதிஸ்தவம்.

☞ ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான், பட்டர் முதலான பூர்வாசாரியர்கள் யாவரும் பணித்த ஸ்தோத்ரங்கள் யாவையும் எளிய தெளிய வியாக்கியானங்களுடன் ஏற்கெனவே வெளிவந்துள்ளன.

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்
இயற்றிய
சரணாகதிஸாரதீபிகை என்னும்
சரணாகதிதீபிகையுரை முற்றுப் பெற்றது.